For private circulation only

Book Post

www.tchsportal.co.in

# கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்

விலை : ரூ 60 | திசை தெரியாமல் திகைக்காதிருக்க திருச்சபை வரலாறு தெரியவேண்டும் | ஜுலை 2021 | இதழ் 14



## மருத்துவ துறையில் கிறிஸ்தவர்களின் பங்கு

Dr.Ida-Scudder

# ஆசிரியர் சுவடு



## கிறிஸ்துவுக்குள் அன்பான வரலாற்றுச் சுவடுகள் வாசகர்களே,

ஆண்டவரும், மீட்பருமாகிய இயேசு கிறிஸ்துவின் இனிதான நாமத்தினாலே உங்கள் அனைவருக்கும் திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின் சார்பாக வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

பெருந்தொற்றின் காரணமாக சரியான நேரத்திலே வரலாற்று சுவடுகள் உங்கள் கரங்களில் வந்து சேர முடியாத சூழ்நிலை உண்டு. எனினும் ஒவ்வொரு மாதமும் அச்சிட கர்த்தர் உதவி செய்தார். இம்மாத இதழானது 'மருத்துவ துறையில் கிறிஸ்தவர்களின் பங்கு' என்ற கருப்பொருளின் அடிப்படையில் கட்டுரைகளும், ஆய்வுக்கட்டுரைகளும் கொடுக்கப்பட்டுள்ளது. பொருக்கியெடுத்த முத்துக்களைக் கொண்டு சிறந்த முத்துமாலை அமைப்பது போன்று சிறந்த கட்டுரைகளைக் கொண்டு இவ்விதழ் அமைந்துள்ளது. மிஷனெரிகளின் சுயநலம் இல்லா சேவை, தியாக மனப்பான்மை மற்றும் கிறிஸ்துவுக்காக தங்களின் அர்பணிப்பு ஆகிய இவைகளே நம்மை இன்று ஆசீர்வாதத்தின் நிலையில் வைத்துள்ளது. எந்த ஒரு அடிப்படை வசதியும் இல்லாத காலத்திலே, மருத்துவமனைகள் கொண்டு வந்து, மருத்துவம் செய்து நம் உயிர் காத்த மகான்கள் மிஷனெரிகள். இங்கிலாந்து அரசியின் மருத்துவராக பணியாற்றும் வாய்ப்புக் கிடைத்தும்கூட அதை துச்சமென எண்ணி, இறை பணியாற்ற இந்தியா வந்த ஸ்ட்ராஹன் போன்ற மருத்துவ மிஷனெரிகளைப் பெற்ற தேசம் இது. அத்தனை தியாகங்களோடு கூட அமைக்கப்பட்ட மருத்துவமனைகளில் சில இன்று தேடுவாரற்று, பராமரிப்பில்லாமல், சில வேளைகளில் அரசியலில் அடிப்பட்டு அல்லோலப்படுவது மனதிற்கு வேதனையை ஏற்படுத்துகிறது.

இவ்விதழளை வாசிக்கும் நேயர்கள், மிஷனெரிகளின் தியாகங்களை மற்றவர்களோடு கூட பகிர்ந்துக் கொண்டு, மிஷனெரிகள் ஏற்றிய அந்த தியாக தீபத்தை அடுத்த தலைமுறையினரின் கரங்களில் கொடுப்பது நம் கட்டாய பணியாகும். எனவே வாசகர்கள் இந்நூலை நண்பர்கள், உறவினர்களுக்கு அறிமுகப்படுத்த அன்போடு கூட கேட்டுக் கொள்ளுகின்றேன். ஒவ்வொரு மாதமும் இவ்விதழை வெளியிடுவதற்கு மிகுந்த பொருட்செலவுகள் உண்டு, முடியுமானால் காணிக்கையாகவோ அல்லது நன்கொடையாகவோ கொடுத்து தாங்க அன்போடு கூட கேட்டுக் கொள்ளுகின்றேன்.

வரும் நாட்களில் வரலாற்று ஆய்வுகளை இன்னும் அதிகப்படுத்த திட்டங்கள் உண்டு. ஆகஸ்ட் மாத இதழின் கருப்பொருளாக 'கிறிஸ்தவ மிஷன் இயக்கங்களின் பங்கு' என்று தேர்ந்தெடுத்துள்ளோம். இந்தியாவில் கிறிஸ்தவ மிஷன் இயக்கங்கள் ஆற்றிய பணிகளை குறித்த உங்கள் கட்டுரைகளை 20ம் தேதிக்குள் அனுப்புமாறு அன்போடு கேட்டுக்கொள்கிறேன்.

மன்னா செல்வகுமார்




**பதிப்பாசிரியர் : மன்னா செல்வகுமார்**

**வடிவமைப்பு : சுஜித் ரெக்ஸ்**

**சந்தா விபரங்களுக்கு**
**91767 80001**

**வரலாற்று சுவடுகள்**
**மாத ஆய்விதழ் தொடர்பான ஆலோசனைகளை**
**இந்த மின்னஞ்சலில் அனுப்பலாம்**
**christianhistorical@gmail.com**

WWW.
**tchsportal.co.in**

# வரலாற்றில் கொள்ளை நோய்களும், கிறிஸ்தவர்களின் பங்களிப்பும்

நீங்கள் உலகமெங்கும் போய் சர்வ சிருஷ்டிக்கும் சுவிசேஷத்தை அறிவியுங்கள் என்ற ஆண்டவரின் கட்டளையை ஏற்றுக்கொண்ட சீடர்கள் உலகின் பல இடங்களுக்குச் சென்று இயேசு கிறிஸ்துவின் அன்பினை எடுத்துக்கூறினார்கள். வாயின் வார்த்தைகளினாலே சொன்னதோடு நிறுத்திவிடாமல் தங்கள் செய்கைகளினாலும் அவைகளை செய்து காண்பித்தார்கள். கிறிஸ்தவ மார்க்கத்தை அநேக மக்கள் இவ்வுலகில் ஏற்றுகொள்ளுவதற்கு காரணம் கிறிஸ்துவை ஏற்றுகொண்டவர்கள் காண்பித்த அன்பும், பரிவுமேயன்றி வேறொன்றும் இல்லை. உலகம் தோன்றியது முதலே இப்பொழுது நாம் அனுபவித்துக் கொண்டிருக்கும் பெருந்தொற்று அவ்வப்போது ஏற்பட்டு உலகை கலங்கடித்துக் கொண்டிருந்தது. அச்சூழலில் கிறிஸ்தவர்கள் சற்றும் அஞ்சாதவர்களாய் தேவைகளோடு இருந்த மக்களுக்கு உதவிக்கரங்கள் நீட்டினார்கள்.

இறைவன் படைத்த இவ்வுலகில் நிகழும் எல்லா காரியங்களுக்கும் மனிதனே காரணமாக இருக்கின்றான். பெருந்தொற்றினிமித்தம் இன்று உலகம் முழுவதும் பெரும்பாதிப்பை சந்தித்துக் கொண்டிருக்கிறது. கர்த்தர் மனிதனுக்குக் கொடுத்த முதலாவது கட்டளை ஆதியாகமம் 2: 15ல் 'தேவனாகிய கர்த்தர் மனுஷனை ஏதேன் தோட்டத்தில் அழைத்துக் கொண்டு வந்து, அதை பண்படுத்தவும் காக்கவும் வைத்தார்'. ஆனால் மனிதனோ கர்த்தர் தனக்குக் கொடுத்த முதல் கட்டளையை மீறினவனாக மாறிப்போனான். லின் ஒயிட் என்ற அமெரிக்க வரலாற்று ஆசிரியர் எல்லா இயற்கை சீரழிவிற்கும் கிறிஸ்தவர்களே காரணம் என்று சாடுகிறார். ஆதியாகமம் 1: 28 ல் 'பின்பு தேவன் அவர்களை நோக்கி நீங்கள் பலுகி பெருகி, பூமியை நிரப்பி, அதை கீழ்ப்படுத்தி, சமுத்திரத்தின் மச்சங்களையும் ஆகாயத்துப் பறவைகளையும், பூமியின்மேல் நடமாடுகிற சகல ஜீவஜந்துக்களையும் ஆண்டுகொள்ளுங்கள் என்று சொல்லி, தேவன் அவர்களை ஆசீர்வதித்தார்'. என்ற வசனத்தை கிறிஸ்தவர்கள் தவறுதலாகப் புரிந்துகொண்டு கர்த்தரின் படைப்புகள் அனைத்தையும் கீழ்ப்படுத்தி அதனைக் கெடுத்துவிட்டனர் என்று சாடுகிறார்.

மனிதன் இயற்கையின் மீது காண்பிக்கும் ஆதிக்கமும், அதிகாரமும் இன்று பற்பல அழிவை உலக அரங்கில் அரங்கேற்றியுள்ளது. இயற்கைக்கு அப்பாற்பட்ட அனைத்துமே மீட்க முடியாத அழிவினையே இவ்வுலகில் ஏற்படுத்தும். இயற்கையை அழித்துவந்த மனிதன் தற்போது தன் கவனத்தை சக மனிதனை அழிப்பதற்கும் தொடங்கியிருக்கின்றான். கொரோனா வைரஸ் என்ற இந்த வைரசும் கூட மனிதனால் உருவாக்கப்பட்ட ஒரு உயிரினமே என்று பெரும்பகுதி மருத்துவர்களால் நம்பப்படுகிறது. உலக வரலாற்றினை பின்னிட்டுப் பார்ப்போமானால் உலகில் பல சமயங்களில் பற்பல விதமான தொற்று நோய்கள் உருவாகி மக்களையே கொள்ளையாகக் கொண்டு போயிருக்கின்றன. இப்படிப்பட்ட இக்கட்டான சூழ்நிலைகள் உருவாகின பொழுதெல்லாம் கிறிஸ்தவம் மிகுந்த ஆதிக்கத்துடன் செயல்பட தொடங்கியதாகவும், அதின் காரணமாக கிறிஸ்தவம் பரவியதாகவும் வரலாற்று குறிப்புகள் உள்ளன.

இரண்டாம் நூற்றாண்டிலே ரோம சாம்ராஜ்யத்தில் அண்டோனைன் பிளேக் (Antonine Plague) என்ற தொற்று வியாதி மிகக் கொடுமையாக பரவினது. ரோம சாம்ராஜ்யத்தில்









கால்பகுதிக்கும் மேலான மக்கள் மரித்துப் போனார்கள். ரோமர்கள் இந்த வியாதி தங்கள் தெய்வத்தின் உக்கிரமான கோபத்தினால் உண்டான ஒன்று என்று நம்பினார்கள். வியாதியினால் பாதிக்கப்பட்டவர்களை நெருங்குவதற்குக் கூட அஞ்சியிருக்கிறார்கள். ஆனால் கிறிஸ்தவர்கள் மிகுந்த பரிவன்போடு கூட அவர்களுக்கு மருத்துவ உதவிகளையும், பிற உதவிகளையும் செய்தபடியினால் அநேகர் கிறிஸ்துவின் அன்பை ருசிப்பதற்கு ஏதுவாக அமைந்திருக்கின்றது.

இதனைத் தொடர்ந்து மூன்றாம் நூற்றாண்டிலே மற்றொரு நோய்தொற்று பரவியுள்ளது. பிளேக் ஆப் சிப்ரியன் என்ற அழைக்கப்பட்டது. கி.பி. 249 முதல் 262 வரை இந்நோயின் கொடுமை ரோம சாம்ராஜ்யத்தையே உலுக்கியுள்ளது. வேலை செய்வதற்கு மனிதர்கள் கிடைக்காத அளவிற்கு அநேக மக்கள் இந்நோயினால் மரித்திருக்கிறார்கள். பெரிய உணவு தட்டுப்பாடுகளும் அந்நாட்களில் ஏற்ப்பட்டுள்ளது. ரோமர்களின் ராணுவங்களில் சேருவதற்கு கூட நபர்கள் இல்லாத வண்ணம் அநேக மக்கள் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். பேராயர் சிப்ரியன் அவர்களின் பெயரால் இந்நோய் அழைக்கப்படுகிறது. அதற்கு ஒரு காரணம் உண்டு. பேராயர் அவர்கள் இந்நோயினைக் குறித்து அநேக காரியங்களை எழுதியிருக்கிறார். அந்நாட்களில் பேராயர் அவர்கள், 'நோயினால் பாதிக்கப்பட்டு மரித்து பரலோகத்தில் வாழும் மக்களுக்காக கவலைக்கொள்ள வேண்டாம். மாறாக உயிரோடு கூட நோயினால் பாதிக்கப்பட்ட மக்களை கவனிப்பதற்கு இரட்டிப்பான முயற்சிகளை எடுங்கள்' என்று கூறினார். கிறிஸ்தவர்களின் பெரும் பங்களிப்பினால் பல மக்கள் நோயிலிருந்து தப்பித்துக் கொண்டார்கள். இக்காலத்தில் கிறிஸ்தவர்களின் பங்களிப்பை பேராயர் டியோனீசியஸ் என்பவர் தம்முடைய குறிப்பில் 'ஆபத்தைக் கவனத்தில் கொள்ளாமல், நோயுற்றவர்களைப் பொறுப்பேற்று, மக்களின் ஒவ்வொரு தேவையையும் பூர்த்திசெய்தனர்' என்று குறிப்பிட்டிருக்கிறார். இக்காலக்கட்டத்தில் கிறிஸ்தவர்களின் நற்செயல், பல மக்களின் மனதில் இயேசு கிறிஸ்துவின் போதனையில் மிகுந்த நம்பிக்கையினையும், பற்றினையும் கொடுத்திருக்கிறது.

கிறிஸ்தவர்களைக் குறித்ததான தாக்கம் பல நூற்றாண்டுகள்வரை தொடர்ந்திருப்பதைக் கூட காணமுடியும். குறிப்பாக பேரரசர் ஜூலியன் என்பவர் ரோம சாம்ராஜ்யத்தின் பேரரசராக இருந்தார். புறமதக் கடவுள் தொண்டரான இவர், கிறிஸ்தவர்களைப் பெரிதும் வெறுத்தவர். கிறிஸ்தவர்களைப் பற்றி இவர் கூறும்போது கலிலேயர்களாகிய இவர்கள் கிறிஸ்தவர்கள் அல்லாத மற்ற நோயுற்றவர்களையும் கூட தங்களுடையவர்களாகக் கவனித்துக் கொண்டார்களென்று குறிப்பிட்டிருக்கிறார். அக்காலத்தில் கிறிஸ்துவை ஏற்றுகொண்டவர்களின் சேவை மனப்பான்மையினால் பல்லாயிரக்கணக்கான உயிர்கள் காக்கப்பட்டது உண்மையே. ரோட்னி ஸ்டார்க் என்ற வரலாற்று ஆசிரியர் தொற்று நோயினால் உயிரிழந்தவர்கள் கிறிஸ்தவர்கள் அல்லாத நகரங்களைக் காட்டிலும் கிறிஸ்தவர்கள் வாழ்ந்த நகரத்தில் மிகக் குறைவானதாகவே இருந்தது என்று குறித்திருக்கிறார்.

மூன்றாம் நான்காம் நூற்றாண்டின் பக்கங்களைத் தொடர்ந்து, 16ம் நூற்றாண்டிலேயும் ஒரு கொடிய தொற்று மக்களைத் தாக்கியிருக்கிறது. 1527ம் ஆண்டு ஜெர்மன் தேசத்தில் மார்ட்டின் லூத்தர் வசித்த விட்டன்பர்க் நகரம் மிக கடுமையாக பாதிப்படைந்திருக்கிறது. அநேகர் மார்ட்டின் லூத்தரை பத்திரமான இடத்திற்கு சென்று விடும்படியாக வற்புறுத்தியிருக்கிறார்கள். ஆனால் அவரோ அதனை மறுத்து தன்னுடைய திருச்சபை மக்களுக்குத் தொடர்ந்து பணியாற்றியிருக்கின்றார். இதற்கு அவர் கொடுத்த விலை, அவருடைய அன்பு மகள் எலிசபெத் ஆவார். மார்ட்டின் லூத்தரின் மகள் எலிசபெத் இந்நோயினால் தாக்கப்பட்டு மரித்துப் போனாள். அதனைத் தொடர்ந்து அவர் சிறிய பிரதி ஒன்றினை எழுதினார், 'கிறிஸ்தவர்கள் கொள்ளை நோயிலிருந்து தப்பி ஓட வேண்டுமா?' (Whether Christians Should Flee the Plague). கிறிஸ்தவர்கள் ஒவ்வொருவரும் மக்களுக்காக நோயுடன் எதிர்த்துப் போராட வேண்டும். அது அவர்களை சிலுவைகளாக மாற்றுகிறது, அதில் நாம் இறக்கவும் தயாராக இருக்க வேண்டும் என்று எழுதியிருக்கிறார். எழுதியதோடு மட்டுமல்லாது செயலிலும் காண்பித்திருக்கிறார்.

பதினாறாம் நூற்றாண்டின் மையப்பகுதியில் ஜெனிவா தேசத்தில் ஏற்பட்ட மற்றொரு தொற்று, மக்களை உருக்குலையச் செய்தது. 1542ம் ஆண்டு மார்ட்டின் லூத்தரின் சமகாலத்தில் வாழ்ந்த ஜாண் கால்வின் என்பவர் இத்தொற்று காலத்தில் இறைமக்களுக்கு பெரும்பங்காற்றினார்கள். ஜாண் கால்வின் தலைமையிலான போதகர் குழு ஒன்று அமைக்கப்பட்டு, அவர்கள் தொற்றினால் பாதிக்கப்பட்ட மக்களை சந்தித்து அவர்களின் தேவைகளைச் சந்தித்து வந்திருக்கிறார்கள். 1542ல் ஜெனிவா நகரத்தில் கருப்பு தொற்று (Black Plague) என்ற பெயருடன் ஒரு நோய் தாக்க ஆரம்பித்தது. இவ்வகை நோய் எர்சினா பெஸ்டிஸ் (yersina Pestis) என்ற பாக்டீரியாவினால் ஏற்பட்டது. தொற்றின் தாக்கம் அதிகரிக்க ஆரம்பித்தது. அநேக போதகர்கள் வெளியே செல்லுவதற்கே பயப்பட்டார்கள். அச்சூழலில் பெரி பிலாங்கெட் (Pierre Blanchet) என்ற போதகர் நோய் தொற்றினால் பாதிக்கப்பட்ட மக்களை ஊருக்கு வெளியே இருந்த மருத்துவமனைக்கு கொண்டு செல்லுவதற்கு பெரிதும் உதவினார். ஆனால் சிறிது காலத்திலேயே நோய் தொற்றினால் பாதிக்கப்பட்டு மரித்து போனார். போதகர் பெரி பிலாங்கெட் அவர்கள் விட்டு சென்ற பணியினை தொடர்வதற்கு யாரும் முன்வராத ஒரு நிலை ஏற்பட்டது. ஒரு வாரத்திற்கு பிறகு மத்தேயு டி ஜெனிஸ்டேன் (Matthieu de Geneston) என்ற போதகர், தொற்றினாலே பாதிக்கப்பட்ட மக்களுக்கு உதவிகள் செய்ய முன்வந்தார். ஆகிலும் சிறிது காலங்களே அவராலும் அவ்வுதவியை செய்ய முடிந்தது. தொற்றினால் பாதிக்கப்பட்டு மறித்துப் போனார்.

இவ்விழப்புகள் ஊழியர்களின் மத்தியில் பெரும் அதிர்வை கொடுத்தது. இதைப்போன்ற காலங்களில் ஊழியர்களும் மற்றவர்களைப் போன்று அடைபட்டு வீடுகளுக்குள்ளாக கிடக்கக்கூடாது, தங்களால் இயன்ற உதவிகளை மக்களுக்கு செய்ய வேண்டுமென்ற உணர்வை அவர்களுக்குக் கொடுத்தது. சில ஆண்டுகள் கழித்து மறுபடியுமாக ஜெனிவா நகரத்தை இதைப் போன்று ஒரு தொற்று பாதித்தது. ஊழியர்களின் கடந்தகால அனுபவங்கள் அவர்களை மிரட்டியது. எனினும்

தங்களுடைய அர்ப்பணிப்பை எண்ணி மக்களுக்கு உதவுதற்கு முன்வந்தார்கள். இம்முறை மொத்த ஊழியர்களும் அல்ல, ஒவ்வொருவராக இப்பணியிலே ஈடுபடுத்தப்படுவதற்கு முடிவு செய்தார்கள். அவர்களுள் ஒருவரை தெரிந்தெடுப்பதற்காக, குலுக்கல் முறையில் தெரிந்தெடுத்தார்கள். தெரிந்தெடுக்கப்பட்டவர்கள் மருத்துவமனையில் தொற்றினால் பாதிக்கப்பட்டு சிகிச்சை பெற்று வந்தவர்களை சந்தித்து அவர்களுக்காக ஜெபித்தார்கள், அதோடு கூட நிறுத்திவிடாமல் வீடுகளில் தனிமைப்படுத்தப்பட்டவர்களைச் சந்தித்து அவர்களுக்காக ஜெபித்தார்கள். நோய் தொற்றின் பயத்தினால் இம்முறை அவர்கள் முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் சிலவற்றை மேற்கொண்டார்கள். வீட்டில் வெளியே நின்றபடி நோயாளிகளுடன் ஜன்னல் வழியாக பேசி அவர்களுக்காக ஜெபித்தார்கள்.

மூன்றாவது முறையும் இந்நோய் ஜெனிவா நகரத்தை 1568 முதல் 1571ம் ஆண்டுகளுக்குள்ளாக தாக்கியது. அநேக மக்கள் தங்களுக்கு அன்பானவர்களை இழக்கக் கொடுத்தார்கள். ஆனால் இம்முறை ஊழியர்கள் தங்கள் ஜனங்களுக்காக வெகு அர்ப்பணிப்போடு கூட செயல்பட்டிருக்கிறார்கள். இரண்டாவது முறை பின்பற்றிய குலுக்கல் முறையை கைவிட்டுவிட்டு, ஊழியர்கள் அனைவரும் தங்களால் முடிந்த உதவிகளை மக்களுக்கு செய்து கிறிஸ்துவின் அன்பை வெளிப்படுத்தியிருக்கிறார்கள்.

இந்திய தேசத்திலும் இப்பேற்பட்ட தொற்று வியாதிகள் அதிகம் பரவியதாக வரலாற்று பக்கங்கள் கூறுகின்றன. 17ம் நூற்றாண்டில் நம் தேசத்தில் பஞ்சாப் பகுதியில் கொள்ளை நோய்கள் அதிகம் பரவியிருக்கின்றன. ஜஹாங்கீர் ஆட்சி செய்த காலத்தில் 1616 முதல் 1618ம் ஆண்டு வரை இந்நோயின் தாக்கம் மிக அதிகமாக இருந்துள்ளது. அநேகர் உயிரிழந்துள்ளார்கள். பூட்டிய வீட்டிற்குள்ளாக பிணங்கள் அடக்கம் செய்வதற்கு ஆட்கள் இல்லாமல் கிடந்திருக்கின்றன. முட்டமாட் கான் என்ற வரலாற்று ஆசிரியர் இந்நோயினை குறித்து எழுதும் போது, ஒரு மணி நேரத்தில் சுமார் 15 நபர்கள் இந்நோய்க்கு பலியானார்கள் என்று குறிப்பிட்டிருக்கின்றார். டெக்கான் பீடபூமி பகுதிகளில் 1702 முதல் 1704ம் ஆண்டு வரை கொள்ளைநோய்கள் பரவியிருக்கின்றன. சுமார் இரண்டு மில்லியன் மக்கள் இவ்வியாதிக்கு மரித்திருக்கிறார்கள். 1812 முதல் 1821ம் ஆண்டு வரை குஜராத் பகுதிகளில் கொள்ளை நோய் பரவியிருக்கின்றன. இப்படியாக வரலாற்றின் பக்கங்களில் அநேக கொள்ளை நோய்கள் இந்தியாவிலும் பரவியிருக்கின்றன.

இந்தியாவில் மிஷனெரிகளின் வரவால் தொற்று நோய் ஏற்படும் காலங்களில் பெரும் அச்சம் தவிர்க்கப்பட்டுள்ளது. இங்கிலாந்து ஆட்சியின் கீழிருந்தக் காலத்தில் இப்படி கொள்ளை நோய்கள் ஏற்படும் காலத்தில் போர் வீரர்கள் வீதிவீதியாக சென்று வீடுகளில் இருக்கும் ஒவ்வொருவரையும் எச்சரிப்பு செய்வார்களாம். வீட்டினை சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும், சுற்றுப்புறம் தூய்மையானதாக இருக்க வேண்டுமென கற்றுக்கொடுத்தார்கள். வீரர்கள் கிறிஸ்தவர்களின் வீட்டிற்கு வரும் போது, அவ்வீடு மற்றவர்களின் வீடுகளைக்காட்டிலும் அதிக சுத்தமாக இருந்துள்ளது. எனவே கிறிஸ்தவர்களின் வீடுகளுக்கு எச்சரிப்பு கொடுப்பதற்கு அவசியம் இல்லாமல் போயிற்று. அடுத்தமுறை வீரர்கள் வீடுகளுக்கு வரும் போது, மக்களிடம் நீங்கள் கிறிஸ்தவர்களா என்று தான் முதல் கேள்வியினை வைப்பார்களாம். அவர்கள் நாங்கள் கிறிஸ்தவர்கள் என்று சொல்லுவார்களானால், வீரர்கள் எச்சரிப்புக் கொடுக்காமல் அடுத்த வீட்டிற்கு சென்றுவிடுவார்கள். தொற்று நோய் ஏற்பட்ட அக்காலத்தில் கிறிஸ்தவர்களின் வீடுகள் சுத்தமாக இருந்தபடியினால் அதிகமான மரணங்கள் ஏற்படவில்லை. இதனைக் கண்டதும் மற்ற மதத்தைச் சார்ந்தவர்கள் கிறிஸ்தவர்களின் வீட்டிற்கு அருகே சென்று குடியிருந்திருக்கிறார்கள். கிறிஸ்தவர்களும் மற்ற மக்களுக்கு தங்களாலான உதவிகளைச் செய்திருக்கிறார்கள். அதோடு கூட நிறுத்திவிடாமல், சிலுவை கொடியினை ஏந்தினவர்களாக மற்ற மதத்தைச் சார்ந்த மக்களோடு கூட ஒவ்வொரு தெருவாக பவனியாக சென்று ஜெபித்திருக்கிறார்கள். அதின் விளைவாக கொள்ளைநோய் அதிசீக்கிரத்தில் நீங்கியிருக்கிறது. (ஆதாரம்: Star in the East, No.91, Vol. Iv, July 1900, p.154)

தென் தமிழகத்தில் காலரா என்ற கொடிய கொள்ளை நோய் வெகுவாக பரவியிருக்கிறது. அப்பொழுது பணி செய்த கனம். ஜாண் தாமஸ், பேராயர். ராபர்ட் கால்டுவெல், கனம். மார்காஷியஸ், கனம் ரேனியஸ், கனம் தாமஸ் ராக்லேண்ட், கனம் பேரன் புரூக் போன்றவர்கள் தங்கள் உயிரினையும் துச்சமாக மதித்து மக்களுக்கு இறைப்பணியோடு கூட மருத்துவ பணியினையும் செய்திருக்கிறார்கள். மரித்தவர்களை அடக்கம் செய்துவிட்டு வீடு திரும்புவதற்கு முன்னதாக பலர் மரித்துப் போயிருப்பார்கள். அநேக மக்கள் தங்கள் ஊர்களைக் காலி செய்துகொண்டு பல ஊர்களுக்கு சென்றார்கள். முழு கிராமமே காலியான வரலாறுகளெல்லாம் உள்ளன. காலரா நோயினால் தப்பித்து புதிய ஊர்கள் தோன்றிய வரலாறுகளெல்லாம் நம் திருமண்டலத்தில் உள்ளன. அப்பொழுது கூட இந்த மிஷெனெரிகள் தங்கள் சொந்த ஊருக்குத் திரும்பிச் செல்லவில்லை. தங்கள் ஊழியங்களை மிக நேர்த்தியாக செய்தார்கள். அவர்கள் ஊழியத்தின் விளைவே அநேக கிராமங்கள் இயேசுவை ஏற்றுக்கொள்ள ஆரம்பித்தன.

1902ம் ஆண்டுகளில் திருநெல்வேலி பகுதியில் காலரா பெருமளவில் பரவ ஆரம்பித்தது. நாசரேத், கிறிஸ்தியாநகரம், இடையன்குடி போன்ற மிஷெனெரி பணித்தளங்களும் இதற்கு விலக்கல்ல. அச்சமயம் நாசரேத்தில் கனோன். ஆர்தர் மார்காஷியஸ் ஐயரவர்கள் பணியாற்றி கொண்டிருந்தார்கள். காலரா மரணத்தை நிறுத்துவதற்கு வழி தெரியாமல் திகைத்துப்போய் கர்த்தரின் பாதத்தில் அமர்ந்து ஜெபித்தார்கள். தன்னால் இயன்ற மருத்துவ உதவிகளை மக்களுக்குக் கொடுத்தும்கூட மக்களை இக்கொடிய நோயிலிருந்து காப்பாற்ற முடியவில்லை. எனவே ஒரு தீர்மானம் செய்தார்கள். தினந்தோறும் நாசரேத் தூய யோவான் ஆலயத்தில் திருவிருந்து ஆராதனை ஆசரிக்க வேண்டுமென்று முடிவு செய்து, ஆராதனையை ஆரம்பித்தார்கள். வெகு சில நாட்களுக்குள்ளாக காலரா வியாதி நாசரேத் பகுதியினை விட்டகன்றது. இந்நாள் வரையிலும் அப்படி ஒரு நோய் நாசரேத் பகுதியினை தொடவில்லை.

அதேசமயம் கிறிஸ்தியாநகரம் பகுதியிலும் காலரா பரவியது. அச்சமயம் பவுல் ஐயரவர்கள் ஊழியம் செய்துகொண்டிருந்தார்கள். யாராவது காலரா நோயினால் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள் என்று



அறிந்தவுடன், கனம் பவுல் ஐயரவர்கள் தன்னுடன் மருத்துவர் மற்றும் சுவிசேஷகர் ஆகியோரையும் உடன் அழைத்துச் சென்றிருக்கின்றார்கள். மருத்துவர் நோயாளிக்கு மருத்துவம் செய்ய, கனம் குருவானவர்கள் அவர்கள் ஜெபிக்க அநேக வியாதிக்காரர்களை குணமாகியிருக்கிறார்கள். வியாதிக்கு பயந்து அநேகர் வீடுகளை விட்டு தங்கள் தோட்டங்களுக்குச் சென்று அங்கு தங்கியிருக்கிறார்கள். அங்கும் அவர்களை காப்பாற்ற முடியவில்லை. காலரா வியாதி சுமார் மூன்று வாரங்கள் நிலைத்திருக்கிறது. எனவே ஐயரவர்கள் ஊரைச் சுற்றி பவனி வந்து பாடல்களை பாடி ஜெபிக்கும் முறையை ஏற்படுத்தியிருக்கிறார்கள். அந்நாள் தொட்டு இந்நாள் வரையிலும் கிறிஸ்தியாநகரத்து மக்கள் இவ்வழக்கத்தினை ஓய்வுநாளின் அதிகாலை வேளையில் ஊரை சுற்றி பவனியாக வந்து ஜெப வேலியடைத்து காத்து வருகின்றனர்.

இன்றைக்கு இந்த கொரோனா வியாதி பெரும் சவாலாக மக்களுக்கு முன்பாக நிற்கின்றது. கிறிஸ்தவர்களின் போதனைகளை செயல் வடிவிலே மக்கள் காணக்கூடிய ஒரு அறைகூவலின் நேரமிது. தனியார் மருத்துவமனைகள் ஒன்றும் தைரியம் கொள்ளாத சூழ்நிலையில் வேலூர் கிறிஸ்தவ மருத்துவ கல்லூரி மட்டும் முதல் அலையில் கொரோனா நோயாளிகளுக்கு வைத்தியம் செய்ய முன் வந்தது. இரண்டாவது அலையில் தான் மற்ற மருத்துவமனைகள் தங்கள் கதவுகளை திறந்தது. 'உன்னைப் போல பிறனை நேசி', 'மனுஷர் உங்களுக்கு எவைகளைச் செய்ய விரும்புகிறீர்களோ, அவைகளை நீங்களும் அவர்களுக்குச் செய்யுங்கள்:' என்ற வசனத்தின்படி செயல்படுகிற நேரமிது. நமக்கு அருகிலிருக்கிறவர்களுக்கு நம் ஆலயமும் திருச்சபையும் ஒரு நல்ல மாதிரியாக மாறட்டும்.

இயற்கைக்கு மாறாக மனிதர்கள் செயலாற்றும் போது இயற்கையின் சீற்றங்களை நாம் சந்திக்க நேரிடும். எனவே நாம் இயற்கையினை நேசிக்கிறவர்களாக மாறுவோம், இயேசுவின் போதனைகளை செயலில் காண்பிப்போம், நிச்சயமாக கர்த்தரின் இராஜ்யம் விரிவடையும்.

**அருள்திரு. H ஜாண் சாமுவேல்**
**பண்டாரஞ்செட்டிவிளை**

# சி.எம்.சி. ஐடா ஸ்கடர்

இந்த நாட்டில் பெண்களை படிக்கவிடவில்லை என்றால் என்ன? நான் படித்துவிட்டு வந்து இந்தப் பெண்களைக் காப்பாற்றுவேன் என மனதிற்குள் சபதமிட்டு அதைச் செய்து காட்டியவரும், உலகின் தரமான மருத்துவமனை எனப் பெயர் பெற்று வளர்ந்து நிற்கும் வேலூர் கிறிஸ்தவ மருத்துவக் கல்லூரி மருத்துவமனைக்கு முதல் விதை போட்டவரும் ஒரு பெண். அவர் பெயர் ஐடா ஸ்கடர்.

ஒரு பெண் தனி ஆளாக நின்று ஏற்றிய மெழுகுவர்த்தி இன்று மிகவும் பிரகாசமாக, உலகத் தரத்தோடு, மிகப் பெரும் மருத்துவமனையாக உருவெடுத்து சென்னைக்கு மிக அருகே வேலூரில், நூற்றாண்டைக் கண்டு நிமிர்ந்து நிற்கிறது. இவர் நம் மக்களுக்காக அழுதிருக்கிறார். நம் மக்களின் மரணத்தைத் தடுக்க தன் நாட்டில் டாக்டராகி இந்தியாவிற்குத் திரும்பி வந்து, இங்கு தன் முழு வாழ்க்கையையும் அர்ப்பணித்திருக்கிறார். இதைச் செய்து முடிக்க அவர் கொடுத்த விலை அவரது வாழ்க்கை. எல்லாவற்றிற்கும் மேல் ஐடா ஸ்கடர் அன்னை தெரசாவிற்கே வழிகாட்டியாகவும் இருந்திருக்கிறார்.

எங்கிருந்தோ கடல் கடந்து வந்து, நம் இந்திய மண்ணில் உழைத்து மக்கள் நலம் பெற மிகப் பெரும் தொண்டாற்றியிருக்கும், ஐடா ஸ்கடரின் தனிப்பட்ட கனவால் உருவானது வேலூர் சி.எம்.சி மருத்துவமனை.

**அருண் ஜோசப்**






# தமிழருக்கான மருத்துவ நற்செய்தியாளர்

இந்த வாசகம் அமெரிக்காவில் உள்ள ஒரு அடக்கத் தலத்தில் வைக்கப்பட்டுள்ள நினைவு கல்லில் பொறிக்கப்பட்டிருக்கிறது. இதை கண்டவுடன் உங்களுக்கு ஒரு ஆச்சரியம் ஏற்படுத்தலாம். யாரோ ஒரு தமிழரைப் பற்றி பேசப்போகிறோம் என்று நினைக்கலாம். ஆனால் இந்த வாசகத்தை கொண்டுள்ள கல்லறையின் சொந்தக்காரர் டாக்டர் சாமுவேல் ஃபிஸ்க் கிறீன் (Dr Samuel Fisk Green) என்னும் அமெரிக்க நற்செய்தி பணியாளர்.

**குழந்தை பருவம்**

டாக்டர் கிறீன் 1822 ஆம் ஆண்டு அமெரிக்காவின் மசாசுசெட்ஸ் மாநிலத்தின் வூஸ்டர் நகரில் வில்லியம் கிறீன், ஜூலியா பிளிம்ப்டன் தம்பதியினரின் எட்டாவது பிள்ளையாகப் பிறந்தார். பதினோரு வயதில் தாயை இழந்த இவர் தனது தந்தை மற்றும் மூத்த சகோதரியின் பராமரிப்பில் வளர்ந்தார். இடைநிலைப்பள்ளி பருவத்திற்கு பின் ஆண்டவரின் அன்பால் ஈர்க்கப்பட்ட கிறீன் தன்னை கிறிஸ்துவின் பணியிலும் ஈடுபடுத்திக் கொண்டார். அதே காலகட்டத்தில் மருத்துவத் துறையை தேர்ந்தெடுத்த கிறீன் 1845 இல் மருத்துவராக பட்டம் பெற்றார். கிறிஸ்துவின் மேலுள்ள தணியாத தாகம் டாக்டர் கிறீன் அவர்களை அமெரிக்க மிஷன் சார்பில் இந்தியா நோக்கி பயணிக்க வைத்தது. 1847 ஆம் ஆண்டு செப்டம்பர் 4 ஆம் தேதி சென்னை அடைந்து பிறகு யாழ்ப்பாணத்துக்கு சென்றார். வட்டுக்கோட்டையில் பணியை ஆரம்பித்த கிறீன் எட்டு மாதங்களில் சரளமாக தமிழ் பேச கற்றுக்கொண்டார். 1850 ஆம் ஆண்டிலேயே தமிழ்மொழியில் மேல் நாட்டு மருத்துவ அறிவைப் பரப்பும் தீர்மானத்தை எடுத்தார்.

'தன்னுடைய பணி தமிழ் மொழியில் மேல் நாட்டு மருத்துவம் பரவ ஒரு ஆரம்ப தீப்பொறி ஆக இருக்கும் என்ற தொலைநோக்கு பார்வையுடன் கிறீன் செயல்பட்டார்.' மற்ற மறை பணியாளர்களின் மருத்துவ பணி குறித்து அறிந்திருக்கும் அளவுக்கு தமிழ் சமூகம் இவருடைய பணியின் சிறப்பு குறித்து அறிந்திருக்கவில்லை என்பது வருந்தக்கூடிய விஷயமாக உள்ளது.

டாக்டர் கிறீன் அவர்கள் தமிழ் மொழி பற்றி உயர்வான கருத்துக்களைக் கொண்டிருந்தார். தமிழர்கள் சரியாக அறிவியல் அறிவை பெறாமையால் பல்வேறு வளர்ச்சிகளை பெற இயலவில்லை என்பதை நன்கு உணர்ந்திருந்தார். அதனால் மேலைநாட்டு மருத்துவ அறிவியலை தமிழ் மக்கள் பெற வேண்டும் என்று முடிவெடுத்தார்.

**மருத்துவ சேவை**

டாக்டர் கிறீன் அவர்கள் 1848 ல் மணிபாயில் ஆங்கில வழியாக மேலை நாட்டு மருத்துவத்தில் கற்பிக்க ஒரு மருத்துவக் கல்லூரியைத் தொடங்கினார். 1852 இல் இரண்டாம் தொகுதி மாணவர்களுக்கு மருத்துவக் கல்வி தொடங்க ஆரம்பித்த போது தமிழ் வழியில் கற்பிக்க வேண்டும் என்று விரும்பினார். ஆனால் அன்றைய குடியேற்ற இலங்கை அரசு டாக்டர் கிறீன் அவர்களின்

இந்த மகத்தான பணியை அங்கீகரிக்கவோ, ஆதரிக்கவோ விரும்பவில்லை. தமிழில் மருத்துவ நூல்கள் வெளியிட விரும்பிய அவரது செயல் தற்கொலைக்கு சமமானது என்று விமர்சித்து தங்களின் எந்த உதவியையும் அளிப்பதற்கு மறுத்து விட்டது.

**ஆங்கிலம் அரசு மொழியாக, ஆங்கிலம் படித்தவர்களுக்கு அரசு வேலை என்று இருந்த காலகட்டத்தில், அறிவியலை படிக்கக்கூடாது, அது கிறிஸ்தவ மதத்துடன் தொடர்புடையது என்று மத அடிப்படைவாதிகள் வாதிட்டு வந்த அந்த சூழ்நிலையில், அமெரிக்க நற்செய்தி பணியாளர் மூலம் தமிழர்களுக்கு மேலை நாட்டு மருத்துவம், தமிழ் மொழியில் கற்பிக்கப்பட்டுள்ளது என்பது வரலாற்றில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டிய வேண்டியதாகும்.**

டாக்டர் கிறீன் அவர்களின் மருத்துவக் கல்லூரியில் பயிலும் மாணவர்கள் தமிழில் மேலை மருத்துவம் படிக்க தயக்கம் காட்டினர். அந்த சமயம் 'எனது மாணவர்கள் ஆங்கிலத்தை மாற்றி தமிழில் கற்றபது பற்றி சலனமடைந்துள்ளனர். அரசு சேவையில் ஈடுபட்டு, சம்பளம் பெறும் வாய்ப்பு குறைவு என்று அவர்கள் எண்ணுகிறார்கள். அது உண்மை. ஆனால் மருத்துவர்கள் அவரவர் கிராமத்தில் சென்று பணி செய்வதே எதிர்கால நோக்கம் ஆகும். எனவே பத்து நாட்கள் ஓய்வு கொடுத்து வைத்திய கல்வியைத் தொடர்வார்களா? அல்லது வேறு தொழிலை நாடுகிறார்களா? என்று தீர்மானிப்பதற்கு அவர்களுக்கு அவகாசம் கொடுத்துள்ளேன். என்று கூறி தன் நிலைப்பாட்டில் அசைக்க முடியாது உள்ள உறுதியை நிலைநாட்டினார். இந்த காலகட்டம் தமிழகத்தில் தமிழ் வித்துவான் ஆக வேண்டுமென்றால் கூட சமஸ்கிருதம் அறிந்திருக்க வேண்டும் என்றும், ஆங்கில மருத்துவம் படித்தால் கூட சமஸ்கிருதம் தெரிந்திருக்க வேண்டும் என்பதும் விதியாக இருந்தது என்பது ஆழ்ந்து நோக்க வேண்டும்.

1866 ஆம் ஆண்டு வாக்கில் மருந்து பெயர், நோய்களின் பெயர்கள், கணக்கு விவரங்கள், மருத்து வகுறிப்புகள் எல்லாமே தமிழில் எழுதப்பட்டு செயல்படுத்தப்பட்டது என்பது கிறீன் அவர்களின் கொள்கை உறுதியையும், தமிழ் ஆர்வத்தையும் உணர முடியும். தமிழ் மருந்து பணிக்கு கிடைத்த வெற்றி டாக்டர் கிரீன் இலங்கையில் பணிபுரிந்த காலத்தில் வாந்திபேதி நோய் பரவி அநேகர் இறந்தனர். இதை தடுக்கும் பொருட்டு பல துண்டுப் பிரசுரங்களை தமிழில் வெளியிட்டு, மக்கள் சுகாதார அறிவு பெற்று நலமடைய உதவினார். டாக்டர் கிறீன் அவர்களின் இந்த மகத்தான பணியை இலங்கை பத்திரிகை வெகுவாக பாராட்டியது. கிறீன் தமிழில் மருத்துவ புத்தகம் எழுதுவது தற்கொலைக்கு சமம் என்று கருதிய அரசு டாக்டர் கிரீன் அவர்களின் உதவியை நாடியது. 1870ல் கிழக்கு மாகாண அரசாங்க அதிபர் டாக்டர் கிரீன் நூல்களை அரசு சார்பாக வாங்கி, மக்களுக்கு வழங்கு ஏற்பாடு செய்ய முன் வந்தது.



இ ர ண் டு முறை காலரா தாக்கிய போதும் டாக்டர் கிரீன் அவர்களின் சேவை மகத்தானதாக இருந்துள்ளது. பல விலை மதிக்க முடியாத மனித உயிர்களை காப்பாற்ற பேருதவியாக இருந்துள்ளது. பல மேலை நாட்டு மருத்துவம் ஆங்கில நூல்களை டாக்டர் கிரீன் அவர்களின் மேற்பார்வையில் அவருடைய மாணவர்கள் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டனர். மருத்துவ நூல்கள், குறிப்புகள் கையேடு போன்ற பல அரிய சேவைகளை தமிழ் மொழியில் வெளியிட்டு, சாதித்தவர் டாக்டர் கிறீன். தமிழ் மொழியில் மருத்துவம் படித்த 33 மாணவர்களை உருவாக்கினார். இன்றைக்கு கூட நம்மால் சிந்தனை செய்து பார்க்க முடியாத அரும்பெரும் செயலை தனிமனிதராக ஒரு நற்செய்தி பணியாளர் 170 ஆண்டுகளுக்கு முன்பு நிகழ்த்திக் காட்டியுள்ளார் என்பது நம்மை வியக்க வைக்கிறது. இலங்கை அரசுடன் இணைந்து யாழ்ப்பாணத்தில் ஒரு மருத்துவமனையை உருவாக்கினார். தன் மாணவர்களை அந்த மருத்துவமனையிலும், நாட்டின் மற்ற மருத்துவமனைகளிலும் பணியாற்ற அனுப்பினார்.




நம்முடைய பண்பாட்டை மறந்து மேலை நாகரீக மயமாகிக் கொண்டிருக்கும் நிலையில் 1864 ஆம் ஆண்டு டாக்டர் கிறீன் அவர்கள் கூறிய கூற்றை இங்கு குறிப்பிடுவது சாலச்சிறந்ததாக இருக்கும் என்று கருதுகிறேன்..."**வேட்டி காற்சட்டையாகவும், சால்வை மேல்சட்டையாகவும், தலைப்பாகை தொப்பியாகவும், தாவர போசனம் மாமிச போசனம் ஆகவும், குடிசை வீடாகவும் மாறுகின்றன..**" எனவே நான் எண்ணுகிறேன்....ஐரோப்பியரின் நடையுடைய பாவனைகளை பின்பற்றும் இந்துக்களை விடக் கிறிஸ்தவ இந்துக்களையே காண ஆசைப்படுகிறேன். கிறிஸ்தவராக மாறுதல் என்பது தேசியத்தை இழப்பது அல்ல என்பதை தெளிவாக கூறியுள்ளார் டாக்டர் கிறீன். தன்னுடைய மருத்துவ மாணவர்கள் ஐரோப்பிய உடையை தவிர்த்து பாரம்பரிய உடை அணிவதையே விரும்பியுள்ளார்.

கிறீன் எழுதியும்,மொழிபெயர்த்தும் தமிழில் வெளியிட்ட சில நூல்களின் பெயர்கள்

1)அங்காதி பாதம் சுகரண வாதம், உற்பலானம்
2)இரண வைத்தியம்
3)கெமிஸ்தம்
4)வைத்தியம்
5)மனுஷ அங்காதிபாதம்
6)மனுஷ சுகரனம்
7)வைத்தியாகரம்
8)இந்திய பதார்த்தகாரம்
9)அருஞ்சொற்கள் அடங்கிய அகராதி



**டாக்டர் கிறீன் அவகளின் புத்தகங்களில் குறிப்பிட்ட இரண்டு விஷயங்களை உங்களுக்கு கோடிட்டுக் காட்ட விரும்புகிறேன்.** கெமிஸ்தம் எனும் நூலின் முன்னுரையில் நோக்கத்தை குறித்து கிறீன் அவர்களே எழுதி உள்ளது:

'இல்லாத சாத்திரமென்ற மப்பில் பதுங்கி தமிழருக்கு நாசமோசத்தை வருவிக்கும் சகுணம், சூனியம் முதலிய பொய்கள் நித்தமும் தடையின்றி உலாவுகின்றன. ரஸவாததுக்குப் பதிலாக பொருளியல் கூறுகளைக் குறிக்கும் கெமிஸ்த வித்தையையும்,

சோதிட சாஸ்திரத்துக்கு பதிலாக வான சாஸ்திரமும்,பொய்யான கல்விக்கு பதிலாக மெய்யான அறிவை தேசத்தில் நிறுத்துவது. ஊரிலும், ஆளிலும் உள்ள துர்ரெண்ணம் பழக்க வழக்கங்களை அகற்ற வேண்டும் என்று நம்பி விரும்புகிறபடியால் இப்புத்தகம் வெளியிடப்படுகிறது.' என்று குறிப்பிட்டுள்ளார்.

அதுபோல தன்னுடைய புத்தகத்தில் கடவுளுக்கு நன்றி செலுத்தி ஜெபத்துடன் தொடங்கியுள்ளார்.

குறிப்பாக இரண வைத்தியம் என்ற நூலில் அவர் எழுதியதாவது, **"பரம வைத்தியராகிய இயேசு கிறிஸ்து நாதரே ஆத்துமாவில் இரட்சிப்புக்குரிய உமது சத்தியம் என்னும் கத்தியில் பற்பல தேசத்தாற் பிடித்திருந்த விக்கிரகாராதனை என்னும் புற்றுரோகத்தை நீக்கியது போல் தேவரீர் இறங்கி சீக்கிரமாய் தமிழ்நாட்டிலிருந்து அக்கேட்டை நீக்கி அருளும்"** என்று ஜெபத்தை வைக்கிறார்.

டாக்டர் கிறீன் அவர்களுடைய அளப்பரிய சேவையை சிறப்பிக்கும் வண்ணம் யாழ்பாணம் மணிபாயில் உள்ள மருத்துவமனை கிறீன் நினைவு மருத்துவமனை என்று அழைக்கப்பட்டு, செயலாற்றிவருகிறது. மேலும் கடந்த 1998 ஆம் ஆண்டு இலங்கை அரசு டாக்டர் கிறீன் அவர்களின் உருவப்படம் பொறித்த தபால் தலை வெளியிட்டு உள்ளது.

### இறுதி காலம்

தன்னுடைய இறுதிக்காலத்தில் அமெரிக்காவில் கழித்த கிறீன் மே 25, 1884 ஆம் ஆண்டு தான் நேசித்த நித்திய மீட்பரின் இளைப்பாறுதலுக்கு சென்றார். தமிழின் மேலும், தமிழரின் மேலும் தனக்கிருந்த ஆழ்ந்த அன்பை வெளிப்படுத்தும் வண்ணம் தன்னுடைய மரணத்துக்கு பின் தன் அடக்க தல நினைவு கல்லில் **'தமிழருக்கான மருத்துவ நற்செய்தியாளர்'** (Medical Evangelist to the Tamils) என்று பொறிக்கும் படி கேட்டுக்கொண்டார். அவரின் விருப்ப படியே இன்றைக்கும் அந்த நினைவு கல், **'மருத்துவ தமிழின் தந்தை'** என்று போற்றப்பட தகுதிவாய்ந்த டாக்டர் கிறீன் அவர்களின் நினைவை சுமந்து நிமிர்ந்து நிற்கிறது.

**சகோ.வெங்கடேசன்**
**தமிழ் கிறிஸ்தவ தற்காப்பு ஊழியம்**

# சுரண்டை மிஷனெரி

மிஷனரி பணி என்பது கிறிஸ்து நாதரின் சுவிசேஷத்தைப் பிரசங்கித்து, மக்களை இயேசு இரட்சகரின் நற்செய்தியின் வெளிச்சத்திற்குள் கொண்டுவந்து பரலோக ராஜியத்தின் சுதந்தரவாளிகளாக்குவதாகும் என்னும் உண்மையைத் தன் ஊழியத்தின் அடிப்படையும் மையக்கருத்துமாகக்கொண்டு உழைத்தவர்கள் மிஷனரிகள். தேவனுடைய ராஜியத்தின் செய்தியும், ஆத்மீக மீட்பின் நல்விசேஷமும் மக்களால் ஏற்கப்பட வேண்டுமெனின், அவர்களது சரீர வாழ்வுப் பாரங்களும் சுமைகளும் கொஞ்சமாவது இலகுவாக்கப்படுவதற்குக் கிறிஸ்து இயேசுவின் அன்பினால் உந்தப்பட்டு செயல்ப்படா விட்டால் மிஷனெரியொருவரின் அருளுரைகளும் ஆவேசப் பேச்சுக்களும் பிரயோஜனம் அற்றதாகிவிடும்.

காலரா முதலிய பயங்கரமான தொற்று நோய்களுண்டான நாட்களிலும், பசியும் பஞ்சமும் தாண்டவமாடிய காலங்களிலும் மிஷனரிமார் ஆற்றிய **'துயர்துடைப்புப்'** பணி பற்றி நாடே போற்றினதுண்டன்றோ. மருத்துவ உதவி செய்யும் திட்டமெதுவும் அந்நாளில் மிஷன் ஸ்தானத்திலாவது மிஷனெரிமாரிடமாவது இருந்ததில்லை.

காலராக் காலத்தில் எல்லா மிஷனெரிகளுமே மருந்துகளைத் தருவித்துக் கிராமங்களில் வினியோகித்து, ஏராளமான மக்களைச் சாவினின்று காத்தனர். மற்றக் காலங்களில் நடமாடின வைசூரி, கொள்ளைக் காய்ச்சல், விஷக்காய்ச்சல் முதலியவைதாக்கினபோதோ மிஷனரிகளால்நோயாளிகளுக்குஎவ்விதஉதவியும்செய்யக்கூடவில்லை. நாட்டு மருத்துவர்களிடத்தில் மருத்துவம் செய்து கொள்வதையன்றி மக்களுக்கு வேறு வழியில்லை. 'ஆங்கில வைத்திய முறை அறியப்படாதிருந்த அக்காலத்தில்,' நாட்டு வைத்தியரி'ன் உதவியினால் பல வியாதிகள் குணமானதைக் கண்ட (சுரண்டை மிஷனெரி) Rev.J.T.G.பேரன்புருக் ஐயர் (Rev.J.T.G.Barenbruck), நாட்டு வைத்தியரொருவருக்குத் தேவையான வசதிகள் செய்து கொடுத்தால், அவர் திறமையாகத் தன் தொழிலை நடத்தி, ஏராளமான மக்களுக்கு உதவி செய்யக்கூடியவராயிருப்பார் என்று தீர்மானித்து ஒரு தமிழ் மருத்துவ நிலையத்தை நிறுவினார் (1847). சங்கரலிங்கம் செட்டியார் என்னும் ஒரு வைத்தியரை அதில் நியமித்தார். அது 1857 வரை திறமையாக நடந்து வந்தது. சாயர்புரம் மிஷனெரி ஹக்ஸ்ற்ற பிள் ஐயர், ஓர் 'இங்கிலீஷ்' மருத்துவ சாலையை அவ்வூரில் நிறுவி (1854) அதில் ஒரு 'திரசரை' (Dresser) நியமித்தார். சொற்ப ஆங்கில மருத்துவ அறிவுள்ள அவர் சுமார் ஓராண்டு சென்னையில் மருத்துவம் கற்றவர். இதுவே திருநெல்வேலி மாவட்டத்தில் முதல் மிஷன் மருத்துவமனை.

மன்னா செல்வகுமார்




# கிறிஸ்தவர்களே–
# நவீன மருத்துவத்தின் தூதுவர்கள்

இந்தியாவின் மருத்துவ சேவை என்பது ஆயுர்வேதம், யுனானி, சித்தா போன்றவைகளை உள்ளடக்கியதாக 19ஆம் நூற்றாண்டு வரை நீடித்தது. இதில் யுனானி முறையென்பது முகலாயர்கள் ஆட்சியில் மேலோங்கி நின்றதாகும். இவை அனைத்துமே அனுபவபூர்வமாக கண்டறிய பட்டதாகும். விஞ்ஞானபூர்வமாக நிரூபிக்கப்பட்ட மருத்துவ முறை அன்று. மருத்துவ முறைகளில் அலோபதி முறை என்று அழைக்கப்படும் நவீன மருத்துவ முறை மட்டுமே விஞ்ஞான பூர்வமாக நிரூபிக்கப்பட்டு சிகிச்சை அளிக்கப்படும் முறையாகும்.

இந்தியாவில் அலோபதிக் சிகிச்சை முறை முதன் முதலில் அமெரிக்க மிஷனரிகளின் மூலமாக மட்டுமே அறிமுகப்படுத்தப்பட்டது என்றால் மிகையாகாது அதாவது, அமெரிக்காவில் டாக்டர் பட்டம் பெற்ற பின்னர் இந்தியாவில் கிறிஸ்தவ ஊழியம் செய்ய தேர்ந்தெடுத்த வழி மருத்துவ சேவையாகும்.

நவீன மருத்துவ சேவையில் என்றும் கிறிஸ்தவ ஊழியத்தில் மிஞ்சி நிற்பவர் மிஷனரி சைலஸ் டவுணர் ஸ்கட்டர் (Silas downer Scudder) ஆவர். இவர்தான் முதல் மருத்துவ ஊழியராக அமெரிக்காவிலிருந்து இந்தியா வந்தவர். இவருக்கு நான்கு மகன்கள், இரண்டு மகள்கள் அனைவரும் மருத்துவம் பயின்று ஊழியம் செய்தனர். இவர்கள் அப்போதைய சென்னை இராஜ்யத்தின் ராணிப்பேட்டை, திண்டிவனம், வேலூர் ஆகிய இடங்களில் பணியாற்றினர்.

1905ஆம் ஆண்டு ஏறக்குறைய பத்து பதினைந்து கிறிஸ்துவ மருத்துவமனைகள் இயங்கி வந்தன. இவைகள் ஒன்று சேர்ந்து **'மெடிக்கல் மிஷனரி அசோசியேஷன்'** என்ற அமைப்பை நாக்பூரில் நிறுவினர். இந்த மருத்துவமனைகளில் பணியாற்றும் மருத்துவர்கள், செவிலியர்கள், நிர்வாகிகள் மற்றும் இதர தொழில்நுட்ப வல்லுநர்களுக்கு பயிற்சி அளிப்பதே இதன் தலையாய நோக்கமாகும். நாளடைவில் இவை பெருகி, கிட்டத்தட்ட சுமார் இரண்டாயிரம் (2000) கிறிஸ்தவ மருத்துவமனைகள் இணைந்து 1926இல் 'கிறிஸ்தவ மெடிக்கல் அசோசியேசன் ஆப் இந்தியா' (CMAI) என்ற பெயரில் பெரிய அளவில் இயங்கி வந்தது. தற்சமயம் டெல்லியில் ஜநத்புரீல் இதன் அலுவலகம் உள்ளது.- பெங்களூரில் இதன் கிளை அலுவலகம் உள்ளது. இதில் கிறிஸ்தவ மருத்துவமனைகளும் மருத்துவத் துறையில் பணியாற்றும் பணியாளர்களும் உறுப்பினராகலாம். இதில் மருத்துவர்கள், செவிலியர்கள், நிர்வாக அலுவலர்கள், ஆய்வக தொழில்நுட்ப வல்லுனர்களும் வருடாந்திர கூடுகையில் பல்வேறு தலைப்புகளில் பயிற்சியும் அளிக்கப்படுகிறது. இதில் ஆச்சரியம் என்னவெனில் 1947 வரை இதில் பயிற்சி பெற்ற அனைவருக்கும் வேலை வாய்ப்புகள் இந்தியா முழுவதும் கிடைத்ததோடு அங்கீகாரமும் கிடைத்தது. இந்தியாவில் இந்த துறைகளில் வேறு பயிற்சி நிலையங்கள் ஏதும் கிடையாது. மேலும், C.M.A.I இன் கீழ் இயங்கும் இரண்டு நர்சிங் போர்டுகள் இன்றும் சட்டப்படி நர்சிங் டிப்ளமோவை அங்கீகாரம் அளிக்க 1947 ஆம் ஆண்டு நர்சிங் கவுன்சில் சட்டம் வழிவகை செய்கிறது.

இது போலவே, கத்தோலிக்க மிஷன் மருத்துவமனைகள் ஒன்று சேர்ந்தது கத்தோலிக் ஹெல்த் அசோசியேசன் ஆப்

இந்தியா(CHAI) என்ற அமைப்பை செகந்திராபாத்தில் இருந்து இயக்கி வருகிறது. "Reaching the unreached" என்பது இதன் நோக்கமாகும் 273 மருத்துவமனைகள் இதில் உறுபினர்களாக உள்ளனர். கத்தோலிக்க சபையைச் சேர்ந்த சுமார் 1000 கன்னியாஸ்திரிகள் மருத்துவராக இலவசமாக வாழ்நாள் முழுவதும் பணியாற்றி வருகின்றனர். சுமார் 3500 உறுப்பினர்களுடன் 5 மருத்துவ கல்லூரிகளும் இதில் உறுப்பினர்கள்.

இம்மானுவேல் ஹெல்த் அசோசியேஷன் என்ற அமைப்பின் கீழ் 21 கிறிஸ்தவ மிஷன் மருத்துவமனைகள் இயங்கி வருகின்றன. இது தலைநகர் டெல்லியில் தலைமை அலுவலகம் அமைத்து, இந்தியாவில் வடக்கு மாநிலங்களிலும், வடகிழக்கு மாநிலங்களில் மட்டும் இயங்கி வருகின்றன.

கிறிஸ்தவ மருத்துவ ஊழியத்தில் சி.எம்.சி வேலூர் ஓர் கலங்கரை விளக்கம் ஆகும். அனைத்து கிறிஸ்தவ மருத்துவமனைகளுக்கும் இது ஒரு எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது.

**அன்னை ஐடா ஸ்கட்டர் என்று ஒரு ஆங்கிலேய பெண்மணியின் தீராத விடாப்பிடியான நம்பிக்கை - இன்று சுமார் 1,200 ஏக்கர் நிலத்தில் - பல்வேறு வசதிகளுடன் சுமார் 3000 படுக்கை வசதியுடன், 150 துறைகளை கொண்டு, 1500 க்கும் மேல் மருத்துவர்கள் பணியாற்றும் ஒரே தனியார் கிறிஸ்தவ மருத்துவக் கல்லூரி இதியாவில் இதுதான்.**

தனது தளராத மருத்துவ சேவையின் மூலம் ஏழை எளிய மக்களுக்கு, அதாவது இந்தியா முழுவதும் உள்ள ஏழை மக்களுக்கு, குறைந்த செலவில் பணியாற்றி வருகிற. இந்தியாவின் நம்பர் ஒன் மருத்துவக்கல்லூரி இது தான்.

இதேபோல, இதே பெயரில் இயங்கி வரும் மருத்துவமனை சி.எம்.சி லூதியானா ஆகும். இது 1874 ல் அமெரிக்கப் பெண்மணியான Dame Edith Mary Brown மூலம் ஆரம்பிக்கப்பட்டு 1881 முதல் மருத்துவமனையாகவும் மருத்துவக் கல்லூரியாகவும் பஞ்சாப் மாநிலத்தில், லூதியானாவில் இயங்கி வருகிறது.

1935ஆம் ஆண்டு அஸ்ஸாம், மிசோரம், திரிபுரா ஆகியவற்றின் எல்லையிலுள்ள மலைவாசிகள் கிராமமாகிய மகுந்தாவில் ஆரம்பித்து, தற்சமயம் இம்மானுவேல் ஹெல்த் அசோசியேசன் கீழ் இயங்கி வரும் மருத்துவமனையே முதலாவது ஆரம்பித்த கிறிஸ்தவ மருத்துவமனையாகும்.

மிகச் சுருக்கமாகச் சொன்னால் இந்தியாவில் நவீன மருத்துவத்தை அறிமுகப்படுத்தியவர்கள் கிறிஸ்தவ அமெரிக்க மருத்துவ மிஷனரிகள் மட்டுமே என்றால் அதில் எள்ளளவும் சந்தேகமில்லை.

**D.சாமுவேல் ஆபிரகாம் ,**
**வழக்கறிஞர்**

மறுவாழ்வு மையத்தை நிறுவி
தலைமையேற்ற முதல் பெண்

# வீல்சேர் டாக்டர் மேரி வர்கீஸ்



மேரி புதுச்சேரி வர்கீஸ் (1925-1986) என்பவர் சி.எம்.சி, வேலூர் மருத்துவமனையில் மருத்துவராக பணியாற்றினார். 1954ல் ஒரு நாள் சக மருத்துவர்களுடன் காரில் செல்லும் போது விபத்துக்குள்ளாகி அவரது முதுகெலும்பு முறிவு ஏற்பட்டு சக்கர நாற்காலியில் மட்டுமே அதன் பிறகு இயங்கி வந்தார். இந்த பெரும் துயரில் தனது மனதையும் உடலையும் முடக்கி விடமால் ஆயிரக்கணக்கான ஏழை எளிய நோயாளிகளின் பரிதாப நிலையை கண்டு மனதுருகி மறுபடியும் ஆபரேஷன்காக கத்தியை கையில் எடுத்தார். மருத்துவமனையின் ஆபரேஷன் தியேட்டரில் செவிலியர்களின் உதவியுடன் வில் சேர்ரில் அமர்ந்து கொண்டே ஆயிரகணக்கான ஆபரேஷன்கள் செய்தார். இதில் பெரும்பான்மையான ஆபரேஷன்கள் இலவசமக செய்யப்பட்டது. கொஞ்சநாளில் ஏழை நோயாளிகள் **"Wheel Chair Doctor'** என்று சொலும் படியான நிலைமை . இவருக்கு பத்மஸ்ரீ பட்டம் வழங்கி இந்திய அரசு கவுரவித்தது.




### தமிழகத்தின் முன்னோடி

# கிறிஸ்தவ மருத்துவர்கள்

ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் தமிழகம் சென்னை மாகாணம் (Madras Presidency) என்று அழைக்கப்பட்டது. கல்வியும், மருத்துவமும் மிகவும் தேவைப்பட்ட அந்த நாட்களில் கிறிஸ்துவின் விடுதலை நற்செய்தியுடன் கல்வியும், மருத்துவமும் தேவைப்பட்ட மக்கள் அனைவருக்கும் பாரபட்சமின்றி சென்று சேர்ந்தது. கிறிஸ்தவ மருத்துவர்களின் தன்னலமற்ற சேவை, மிஷனெரிமார்களின் கல்விப் பணிகள், அக்காலங்களில் வரலாறு படைத்தது. முன்னோடி கிறிஸ்தவ மருத்துவர்கள் மக்கள் பணிகளில் முன் நிலை வகித்தனர். ஐரோப்பிய மருத்துவர்களுக்கு இணையாக சுதேச கிறிஸ்தவ மருத்துவர்களும் அந்த நாளில் சிறந்து விளங்கினர். இந்த எனது கட்டுரையில் மருத்துவப் பணியில் முன்னோடியாக திகழ்ந்த சுதேச தமிழ் கிறிஸ்தவ மருத்துவர்களைப் பற்றி காண்போம். அவர்களைப் பற்றி எழுதுவதும், அவர்கள் சாதனைகளை உலகிற்கு சொல்வதும், ஒரு மறு வாசிப்பாக, திருப்பிப் பார்க்கும் தருணமாக, அவர்களை மறுபடியும் கண்டுபிடித்து மீண்டும் அறிவிப்பதாகவும், இந்த முயற்சி இருக்கும்.

**டாக்டர் S.B.கனகராயன் (Dr.S.B.Kanakarayan)**

இவர் சுதந்திரப் போராட்ட வீரர் சேலத்துச் செம்மல் K.T.பால் (1876-1931) அவர்களின் தாய் வழி தாத்தா ஆவார். இவர் அன்றைய ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் ஆங்கில மருத்துவத்தை விரும்பிப் படித்தார். அன்றைய சென்னை மருத்துவக் கல்லூரியின் (Madras Medical College - MMC) 1852-53 ஆம் ஆண்டுகளில் முதன் முதலாக மருத்துவம் படித்து முடித்து, பட்டம் பெற்ற மருத்துவர்களில் இவரும் ஒருவர் என்ற பெருமையைப் பெற்றவர். (One of the first batch of medical men sent out in the year 1852-53). இப்படியாக முதலும் முன்னோடியுமாக ஆங்கில மருத்துவர்களாக வெளி வந்த இவர்கள் தங்கள் தங்கள் பகுதிகளில் அரசாங்க மருத்துவ மனைகளை ஸ்தாபிக்க அன்றைய ஆங்கிலேய அரசாங்கத்திற்கு உதவியாக செயல்பட்டார்கள். டாக்டர் கனகராயனும் தனது சொந்த ஊரான பொள்ளாச்சியில் முதல் அரசு மருத்துவமனையைக் கட்டினார். 1855 ல் டாக்டர் கனகராயன் ஹன்னா என்ற யுவதியைத் திருமணம் செய்துகொண்டார். திருமதி.ஹன்னா அம்மாள் சமூக சேவைகளிலும், மருத்துவப் பணிகளிலும் டாக்டருக்கு உறுதுணையாக விளங்கினார். முன்னோடி ஆங்கில மருத்துவராக இந்த கொங்கு மண்டல பகுதிகளில் பணி செய்த டாக்டர் கனகராயன் 1874 ஆம் ஆண்டு பொள்ளாச்சியில் மரித்தார். தனது கணவரின் மரணத்திற்குப் பின்னர் திருமதி.ஹன்னா அம்மாள் சேலம் வந்து தனது மருமகனான சிரேஸ்ததார் டேவிட் பால்பிள்ளை (K.T.பாலின் தந்தை) குடும்பத்தாருடன் இணைந்து சமூகப்பணிகளில் ஈடுபட்டுவந்தார். அப்பொழுது சேலத்தில் ஏற்பட்ட இந்து-முஸ்லீம் கலவரத்தில் (Salem Riots - 1882) நல்லெண்ணத் தூதுவராக திருமதி.ஹன்னா கனகராயன் செயல்பட்டு, இருதரப்பினரையும் இணைத்து நிலையான சமாதானம் ஏற்பட முக்கிய பங்காற்றி சேலம் வரலாற்றில் நிலைத்தார்.

**டாக்டர் ஐயாத்துரை மதுரம் (1877-1944)**

திருச்சிராப்பள்ளியில் உள்ள இருங்களூர் என்ற ஊரில் 1877ஆம் ஆண்டு பிறந்தார். இவரது தந்தை டாக்டர் சாமுவேல் மதுரம் ஒரு கிறிஸ்தவ மிஷனெரியாகவும், மருத்துவராகவும், தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் சிறப்பாகப் பணியாற்றியுள்ளார்.



அந்த காலத்தில் ஆரம்பத்தில் Licentiate Medical Practitioner - L.M.P. என்ற பட்டம் பெற்ற டாக்டர் ஐயாத்துரை மேற்கொண்டும் மருத்துவ உயர்கல்வி பயில தஞ்சாவூரில் உள்ள Prince of Wales Medical School ல் சேர்ந்து படித்து முடித்து பட்டம் பெற்றார். ஆரம்ப காலத்தில் 5 ஆண்டுகள் ஆங்கிலேய அரசாங்கப் பணியில் பணியாற்றிய டாக்டர், பின்னர் தனியாக மருத்துவ தொழில் செய்ய முடிவு செய்து விருதுநகரில் தனது மருத்துவத் தொழிலைத் துவக்கினார். பிறகு தனது சொந்த ஊரான திருச்சிராப்பள்ளியில் உள்ள விஸ்வநாயக்கன்பட்டி (இன்றைய தென்னூர் (Tennur) அருகில்) இரண்டு இல்லங்களாக ஒன்று மருத்துவ மனையாகவும், மற்றொன்று இல்லமாகவும் இருக்கும்படியாக அமைத்து அங்கே தனது மருத்துவத் தொழிலை சிறப்பாகச் செய்து வந்தார்.

சித்த மருந்துகளை பயன்படுத்தாமல் தவிர்க்கும் அக்கால ஆங்கில மருத்துவர்களைப் போல் அல்லாமல் இவர் சித்த மருந்துகளை தனது மருத்துவப் பணிகளில் அதிகம் பயன்படுத்தி வந்தார்.

**குருமருந்து:**

'ஒரு மருந்தரும் குருமருந்து' என்ற சேலம் கிறிஸ்தவக் கீர்த்தனைக் கவிஞர் யோவான் யாக்கோபுவின் கீர்த்தனை வரிகளில் வரும் 'குருமருந்து' என்ற வார்த்தையை எடுத்து அதையே தனது மருந்துகளுக்கான பெயராக வைத்துக் கொண்டார். அந்த

மருந்துகளில் அவர் குருவாக 'இயேசுவை' குறிப்பிட்டு, அவரின் படத்தையே தனது மருந்துகளின் சின்னமாகவும் வைத்துக் கொண்டார்.

டாக்டர் ஐயாத்துரை மதுரம் தன்னிடம் வரும் பிணியாளிகளுக்கும், மற்றும் உலகெங்கும் உள்ள பாதிப்படைந்தோருக்கும், தயாரித்து அளித்து வந்த குருமருந்துகள் வல்லமை மிகுந்தவை; அவைகள் குரு தைலம், குரு பல்பொடி, குரு சந்தான சூரணம் (இனவிருத்தி சக்திக்கு), குரு சோக சஞ்சீவினி (இரத்த சோகை), குரு வல்லாரை லேகியம் (ஞாபக சக்திக்கு), குரு மலபார் கூந்தல் தைலம், போன்ற சித்த மருந்துகள் அப்பொழுது மிகவும் பிரசித்தம். தமிழகம், இந்தியா, மற்றும் மலேசியா, சிங்கப்பூர், இலங்கை போன்ற நாடுகளிலும் நல்ல வரவேற்பைப் பெற்றிருந்தது.

இந்த இவரது மருந்துகளுக்கான அடிப்படைகள் இவரது தாத்தாவான **திரு.நல்லமுத்து விசுவாசம்** என்பவரது தொகுப்புகளே ஆகும். அவர் அந்த காலங்களில் திருநெல்வேலி சார்ந்த மலைப் பகுதிகளில் வாழ்ந்து வந்த சித்தர்களின் நட்பாலும், அவர்களுடைய தொடர்பால் உடனிருந்து கற்றறிந்த விஷயங்களே என்று சொல்லப்படுகிறது.

டாக்டர் ஐயாத்துரை மதுரம் அவர்களின் மருத்துவ பணிகளையும்,மருந்துகளின் சிறப்புகளையும் அறிந்த அன்றைய ஆங்கிலேய அரசு அவரைப் பாராட்டி அவருக்கு 'இராவ் பகதூர்' மற்றும் 'இராவ் சாகேப்' என்ற சாம்ராஜ்ஜிய விருதுகளை அளித்து கௌரவித்தது.

**நினைவுச் சின்னங்கள்:**

திருச்சிராப்பள்ளியில் உள்ள புத்தூர் சந்திப்பில் பட்டாபிராமன் சாலைக்குச் செல்லும் வழியில் ஒரு சிலை - அதுதான் டாக்டர் ஐயாத்துரை மதுரம் அவர்களின் திருவுருவச்சிலை. அது அன்றைய மெட்ராஸ் மாகாண முதல்வர் திருமிகு.K.காமராஜர் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. இன்றும் புத்தூரில் உள்ள அவரது எட்டுப் பட்டை பங்களா (Octogonal Bungalow), மற்றும் குரு மருத்துவ அரங்கம் (Guru Medical Hall)ஆகியவை இவரது நினைவுகளைச் சொல்லும்.

**வழித்தோன்றல்கள்:**

இவரதுவழித்தோன்றல்கள்தமிழகஅரசியல்வரலாற்றிலும், மருத்துவத் துறைகளிலும், அரசின் உயர் அலுவல்களிலும்,சமுகப் பணிகளிலும் சிறந்து முத்திரை பதித்திருக்கிறார்கள். குறிப்பாக, டாக்டர் ஐயாத்துரையின் மகன் திரு.ஜார்ஜ் மதுரம் அவர்கள் வழி பேத்தி திருமதி.அகஸ்தினா கிருபா அவர்கள் சேலம் கிருபா மருத்துவ மனையின் நிர்வாக இயக்குனராக செயலாற்றி வருகிறார். இவரது கணவர் டாக்டர் C.T.கிருபா சேலத்தில் புகழ்பெற்ற மூத்த ஆங்கில மருத்துவர். சேலம் மாநகரிலும் அடுத்துள்ள ஊர்ப் பகுதிகளிலும் இவர்களது மருத்துவப் பணிகளால் பயனடைந்து வருபவர்கள் அநேகர். சேலத்தில் இவர்கள் மற்றும் இவர்களது வாரிசுகளாக மருத்துவத் துறைகளில் சிறந்து விளங்கும் மருத்துவர்கள் தங்கள் முன்னோர்களின் பெருமைகளைச் சொல்லி, அவர்கள் வழியில் தொடர்கிறார்கள்.

இந்த கட்டுரையில் இரண்டு முன்னோடி தமிழ் கிறிஸ்தவ மருத்துவர்களைப் பற்றி எழுதியுள்ளேன். தமிழக மருத்துவ வரலாற்றில் சிறந்து விளங்கிய தமிழ் கிறிஸ்தவ மருத்துவர்கள் இன்னும் அநேகர் உண்டு; அவர்கள் வரலாறுகளை எல்லாம் தேடி தொகுத்து வைக்க இந்த எனது கட்டுரை ஒரு வழிகாட்டி, தூண்டலைத் தரும் வாசிப்பு என்றால் அதுவே எனது நோக்கமும் ,எதிர்பார்ப்பும்.

**ஜே.பர்னபாஸ்.**
**சேலம் வரலாற்றுச் சங்கம்,**

# 'விளக்கு ஏந்திய காரிகை'

இங்கிலாந்தில் செல்வ குடும்பத்தில் பிறந்து வளர்ந்து செவிலியர் தொழிலில் ஈடுபட்ட பிளாரன்ஸ் நைட்டிங்கேல் அம்மையாரின் பிறந்தநாள் நாளான மே' 12 உலக செவிலியர் நாளாக கொண்டாடப்படுகிறது. 1854 இல் ரஷ்யாவுக்கு எதிராக நடந்த போரில் பாதிக்கப்பட்ட படைவீரர்களுக்கு இரவு பகல் பாராமல் பிளாரன்ஸ் நைட்டிங்கேல் செவிலியர் குழுவுடன் போர்களத்திற்கு சென்று மருத்துவ உதவிகள் செய்தார்.

இரவு நேரங்களில் கையில் விளக்கேந்திய வண்ணம் நோயாளிகளிடம் சென்று நலம் விசாரித்து மருந்துகள் வழங்கினார். அதனால் அவர் கையில் 'விளக்கு ஏந்திய காரிகை' என அழைக்கப்பட்டார். செவிலியருக்கென்று மரியாதையையும், கண்ணியத்தையும் உருவாக்கிக் கொடுத்தவர் அவர் தான். 1965 ஆம் ஆண்டு முதல் பிளாரன்ஸ் நைடிங்கேல் அவர்களின் சேவையை பாராட்டி அவரின் பிறந்தநாளை உலக செவிலியர் நாளாக கடைப்பிடிக்கப்படுகிறது. செவிலியர் பணி என்பது தொழில் அல்ல, ஒருவகை தொண்டு சாதி, மதத்திற்கு அப்பாற்பட்டு சகிப்புத்தன்மையுடன் ஆற்றும் மகத்தான சேவை செவிலியர் பணி.

'செவிலியர் இன்னொரு தாய்'!!
அவர்களின் பணியை போற்றுவோம்!!
அவர்களின் பணி மதிக்கத்தக்கது!!
அவர்களின் பணி வணங்கத்தக்கது!





# மண்பாண்ட மாதுவின் மகத்துவம்!!



1922ஆம் ஆண்டு ஆலிஸ் வேன் டொரென் என்ற பெண்மணி இந்தியாவில் பயணம் மேற்கொண்டு கிறிஸ்துவ ஊழியங்கள் செய்யும் கல்வி பணிகளை ஆராய்ந்து அவற்றின் மேம்பாட்டிற்காக உதவிகளையும் ஆலோசனைகளையும் கூறி வந்தார். தான் சேகரித்த தகவல்களை புத்தகமாக வெளியிட்டு இந்தியாவில் பெண்களின் மத்தியில் சேவை செய்ய, படித்த இளம் அமெரிக்க பெண்களுக்கு அறைகூவலிட்டார். அந்த புத்தகத்தில் புதிதாக இயங்கிக் கொண்டிருந்த வேலூர் மருத்துவ கல்லூரியில் கண்ட காட்சியை தத்ரூபமாகவும், நகைச்சுவையுடனும் விளக்குகிறார்.

அயல்நாட்டு மிஷனரிகள் மட்டுமின்றி இந்திய பெண்களும் மருத்துவர்களானால் பல்வேறு இடங்களில், இன்னும் பலருக்கும் மருத்துவ சேவை செய்யலாம் என்ற எண்ணத்தில் கிறிஸ்துவ மருத்துவ கல்லூரி, வேலூரில் 1918ல் ஐடா ஸ்கட்டர் அம்மையாரால் பெண்களுக்காக (30 மிஷன் நிறுவனங்களின் உதவியோடு) தொடங்கப்பட்டது. இடவசதியோ, உபகரணங்களோ இல்லாவிட்டாலும் இருப்பதை வைத்து பாடங்கள் உற்சாகமாக எடுக்கப்பட்டன என்று ஆலிஸ் குறிப்பிடுகிறார். முதல் முறையாக கல்லூரியில் பயின்ற மாணவிகள் மகப்பேறியல் (obstetrics) கற்கலாயினர்.

பாடங்களை முறையே கற்க மனித அளவிலான உடற்கூறு மாதிரி (life-size model) நிச்சயம் தேவை. இதற்கான பணவசதியோ, வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்ய நேரமோ இல்லாத காரணத்தினால் அங்கு ஆசிரியப்பணி செய்த மேரி க்ரிஸ்காம் என்பவர் வேலூர் கடைத்தெருவிலிருந்த ஒரு குயவரை அழைக்கிறார்!!! குயவரிடம் பல மணி நேரம் 'மாதிரி' உடலிற்கான விளக்கங்களைக் கூறி அனுப்பினார். முதலில் வந்த மண்ணுடல் வெறும் மண்ணேதான், இரண்டாவதும் மூன்றாவதுவும் உதவுவதாக இல்லை. ஒரு வழியாக கடைசியில் மனித உடலின் சாயலாக ஒரு படைப்பை குயவர் வெற்றிகரமாக கொண்டு வந்தார்.

காத்திருக்கும் மண்பாண்ட மாதுவை உடைக்காமல் சதை அமைக்க கொல்லன் ஒருவன் வரவழைக்கப்பட்டான். குயவன் தந்த உருவத்தின் மேல், சதையை ஒத்த அமைப்பு உண்டாக்க, அவர்கள் பயன்படுத்தியது அக்காலத்து 'போர்ட்' (Ford) வண்டிகளின் தோய்ந்துப் போன பழைய டயர்கள் !!!!மண்னானவள் தயார்! மாணவிகளும் சிறப்பாக மகப்பேறியல் நுட்பங்கள் கற்றனர்.

ஒவ்வொரு சவாலையும் சமாளித்து பெண்களுக்கு மருத்துவ கல்வியைப் புகட்டிய மிஷினரிகளின் அன்பையும், உழைப்பையும் என்னவென்று சொல்ல. "ஆறு பெண்கள் கூட உங்களின் மருத்துவ கல்லூரிப் படிப்பிற்கு வரமாட்டார்கள்" - என்று சொல்லி 1918ஆம் ஆண்டு சவாலிட்ட மெட்ராஸ் மாகாணத்தின் சர்ஜன் ஜென்ரல் (surgeon general) வாயடைத்து போகும் வண்ணம் - 14 பெண்கள் மாகாணத்தில் அதிக மதிப்பெண்களோடு 1922ஆம் ஆண்டு LMP (Licenciate Medical Practioner) படிப்பை முடித்தனர். அவர்களுக்கு பேருதவியாக இருந்த மண்பாண்ட மாதுவிற்கு நன்றி..

கிறிஸ்துவ பணி இயேசுவின் அன்பில் வேறூன்றியிருந்தால் எந்த சவாலையும் சந்திக்கலாம்.

**Rhoda Alex**

தமிழ் நாட்டின் தனிப்பெரும் நாவலாசிரியர்

அ மாதவையா அவர்களின்

# கிளாரிந்தா

(வரலாற்று நெடுந்தொடர்-4)

**வரலாறும் புராணமும்**

கர்நூல் ஜில்லாவில் நல்ல மலைத்தொடரின் மையம். சுற்றிலும் அடர்ந்தகாடு; கொடிய வனவிலங்குகளும், நச்சுப் பாம்புகளும் மலேரியாக் கொசுக்களும் சஞ்சாரம் செய்யும் இடம். நாற்பது சதுர மைல்களுக்கு மனித சஞ்சாரமே கிடையாது. அங்கே மகோன்னதமான கோவில் ஒன்று இருக்கிறது. இந்தியாவின் மிகச் சிறந்த, மிகப் புனிதமான கோவில்களில் அதுவும் ஒன்று. மகேஸ்வரர், தம்மைத் தரிசிக்க விரும்பும் பக்தர்களின் உள்ளத்தைச் சோதிக்க விரும்பி அவர்களுக்குத் தொல்லைகளும் இன்னல்களும் கொடுக்க வேண்டுமென்று நினைத்தால் இதைவிடச் சிக்கலான இடத்தில் எழுந்தருளியிருக்க முடியாது. அடைவதற்கு எளிதான இடமுமல்ல; தங்குவதற்குச் சுகமான ஸ்தலமும் அல்ல. செல்வமும் சக்தியும் படைத்த எந்தப் பக்தனும் தன் பக்தியை எடுத்துக்காட்ட இதைவிட மகத்தான ஆலயத்தை நிர்மாணித்திருக்கவும் முடியாது.

கோவிலிலிருந்து கீழே இரண்டு மைல் தொலைவில் காட்டில் ஒடுங்கிய பள்ளத்தாக்கில் கிருஷ்ணாறு ஓசையில்லாமல் ஓடிக் கொண்டிருக்கிறது. இங்கே ஆறு அகலமாயில்லை. சமவெளியின் நெல் வயல்களுக்கு நீர்ப்பாய்ச்சும் அதன் எண்ணிறந்த வாய்க்கால்களைப் போன்று ஒடுங்கியே செல்கின்றது. காடு மிக நெருக்கமாகவும் பள்ளத்தாக்கு ஒடுங்கியும் இருப்பதால் நடுப்பகலில் கூட கதிரவன் ஒளி அங்கு நுழைவது கடினம்.

கிருஷ்ணாவின் இருண்ட தண்ணீர் மௌனமாக ஓடுகின்றது. மனதை மயக்கும் அவ்விடத்தின் பயங்கர அமைதி எளிதில் கலைவதே இல்லை. பள்ளத்தாக்கின் இரு மருங்கிலும் உள்ள மலைச் சரிவில் குகைகளும் பிளவுகளும் ஏராளமாக இருக்கின்றன. ஆனால் ஆற்றிலிருந்து கோவிலுக்குச் செல்ல கற்கள் பாவிய பாதை ஒன்று உள்ளது. பாதையின் பக்கங்களில் நடு நடுவே இளைப்பாறிக்கொள்ள மண்டபங்களும் உண்டு. ஆற்றுக்குச் சுமார் ஓர் அடி மேலுள்ள பாறையில் நதியை நோக்கி ஒரு சிறிய குகை இருக்கிறது. ஆழ்ந்த தியானத்தில் ஒரு மனித உருவம் தென்படுகிறது. மூப்பினாலும் தவத்தாலும் உடல் மெலிந்திருந்தது. அந்த மனிதர் கண்களை மூடிப் பத்மாசனத்தில் அமர்ந்திருந்தார். முதுகும் மடிமீதிருந்த கைகளும் மரக்கட்டை போன்று நேராக இருந்தன. குளிரையும் பொருட்படுத்தாமல் காவித்துண்டு ஒன்றை மாத்திரம் இடையில் உடுத்தியிருந்தார். தலை வழுக்கையாக இருந்தது. மூச்சு விடும் அசைவுகூடத் தெரியவில்லை. ஏதோ ஒரு மெழுகுப் பொம்மையோ என்று ஐயுறும் வண்ணம் இருந்தது அவர் உருவம்.

திடீரென்று இரண்டு துப்பாக்கிக் குண்டுகள் ஒன்றன் பின் ஒன்றாகப் புதர்களினூடே பாய்ந்து வந்தன. அவற்றின் சத்தம் மலைகளில் மோதி முன்னும் பின்னும் மாறி மாறி எதிரொலித்தது. அது அடங்கியதும் ஒரு பெண் புலியின் வேதனைக் கதறல் கேட்டது.

ஓர் ஐரோப்பியன் கையில் துப்பாக்கியுடன் விரைவாக ஓடி வந்தான். துப்பாக்கி முனை இன்னும் புகையைக் கக்கிக் கொண்டிருந்தது. துறவி சிந்தனை கலைந்து கண்களைத் திறந்தார். அவரைக் கண்டதும் ஐரோப்பியன் வியப்படைந்து ஒரு அடி பின்வாங்கி நின்றான். ஊன்றிய துப்பாக்கி மீது சாய்ந்த படியே சிறிது நேரம் அசையாமல் நின்று விட்டான்.

குறி சிறிது பிசகியிருந்தால் மனித வேட்டையாக முடிந்திருக்கும் என்றும் கண்டு கொண்டான். துறவியின் கண்ணிமைகள் திறந்தனவே தவிர உடலின் வேறெந்தப் பகுதியிலும் சிறு அசைவு கூட ஏற்படவில்லை. தீர்க்கமான அந்தக் கண்கள் ஐரோப்பியன் மீது சில விநாடிகள் மட்டுமே பதிந்தன. அவை மீண்டும் மூடிக்கொள்வதற்குள் ஐரோப்பியன் ஹிந்துஸ்தானியில் கேட்டான்:

யார் ஐயா நீர்? இங்கு என்ன செய்துகொண்டிருக்கிறீர்? புலியை அடித்த குண்டு உம்மீது பாய்ந்திருந்தால்' 'அதனால் ஒன்றும் பாதகமில்லை' என்றார் துறவி அமைதியான வறண்ட குரலில்.

'பாதகமில்லையா?' என்றான் ஐரோப்பியன் வியப்புடன். 'ஒரு வேளை' உமது உயிர் உமக்குப் பெரிதாகத் தோன்றாமல் இருக்கலாம். அதனால் தான் வனவிலங்குகள் மத்தியில் ஆயுதமில்லாமல் இருக்கின்றீர். ஆனால் நான் அப்படியல்ல. அறியாமல் செய்த பிழையெனினும், மனித வேட்டையாடி விட்டோமே என்ற மனப்பளுவுடன் ஆயுட்காலத்தைக் கழிக்க வேண்டியதிருந்திருக்கும். ஆனால் நீர் தனியாக இந்தப்பாறை மீது அமர்ந்து என்ன செய்து கொண்டிருக்கிறீர்?'

'என்னைப் போன்றவனுக்கு மனிதனை விடக் கடவுளும் இயற்கையுமே உகந்த துணை,' என்றார் முனிவர். சிறிது நேரத்தில் தனக்குள்ளாகச் சொல்லிக்கொள்பவர் போல எல்லோருக்குமே எக்காலத்திலும் சிறந்த துணை அதுதான்,' என்றார்.

ஐரோப்பியன் ஒரு பாறையில் உட்கார்ந்தவாறு,' நினைத்துப் பார்த்தால் தெய்வமும் இயற்கையும் எங்கும் இருக்கிறது. மனிதர்களில் சிலர் கெட்டவர்களாக இருக்கிறார்கள் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் என்னைப் பொறுத்த வரையில் புலி சிறுத்தைகளை விட மனிதர் துணை ஏற்றது என்பேன். ஆமாம்,

நீர் இந்தத் தள்ளாத காலத்தில் எப்படி இங்கு வந்து சேர்ந்தீர்?' என்று கேட்டான்.

கேள்விக்குப் பதிலளிக்காமல் துறவி, இறைவன் எங்கும் இருக்கிறான். உண்மை. ஆனால் லௌகிகர்களுக்கு அவன் எங்குமேயில்லை. பொருளாசையும் ஆடம்பரமும் தான் அவர்களுக்கு எல்லாமாக இருக்கிறது,' என்றார்.

'கடவுளின் படைப்புகளிலெல்லாம், மனிதன் தான் மகோன்னதமான படைப்பாவான். அவன் நோக்கங்களும் விருப்புகளும் உயர்ந்தனவாக இருக்கலாம்; தாழ்ந்தனவாக இருக்கலாம். அவன் செயல்கள் சிறந்தனவாக இருக்கலாம்; அற்பமாக இருக்கலாம். எப்படியிருப்பினும் நாம் அவனை ஏற்றுக்கொள்ள வேண்டும். அவன் கடவுளின் மிகச் சிறந்த கைவேலை. அவனை நன்கு பயன்படுத்திக்கொள்வதே சிறப்பாகும்,' என்றான் ஐரோப்பியன்.

'இளவயதாயிருந்தாலும் உங்களுக்கு நல்ல ஞானம் இருக்கிறது. உங்கள் இனத்தவர் எல்லோரும் இப்படி இருப்பதில்லை,' என்ற பெரியவர், முதன் முறையாக அந்த ஐரோப்பியன் மீது சற்றுக் கவனம் செலுத்தத் தொடங்கினார்.

'எங்கள் இனத்தவரைப் பற்றி உமக்கு என்ன தெரியும்?' என்று சிரித்துக்கொண்டே கேட்டான் ஐரோப்பியன்.

பெரியவர் பதில் சொல்லவில்லை. ஐரோப்பியன் மீண்டும் கேட்டான்: ஆமாம், நீங்கள் ஆளண்டாத இந்த நடுக் காட்டுக்கு எப்படி வந்து சேர்ந்தீர்கள்? கொடிய காட்டு விலங்குகள் நிறைந்த இடம் இது. நீங்களோ ஆயுதமில்லாமல் இருக்கிறீர்கள். தள்ளாத வயது வேறு அல்லது மனிதரை விட கடவுளும் இயற்கையுமே சிறந்த துணை என்று நினைத்து நெடுங்காலமாகவே இங்கு வாழ்ந்து வருகிறீர்களா?'

இப்போது இது மனித நடமாட்டமில்லாத பயங்கரமான இடம் தான். ஆனால் ஒரு காலத்தில் இது ஒரு பேரரசின் தலை நகரமாக இருந்தது. பல துன்ப நிகழ்ச்சிகள் இங்கு நடந்திருக்கின்றன. அதோ, அந்தப் பொற்கோயில் அதற்கெல்லாம் சாட்சி,' என்றார் துறவி.



இந்த இடமோ ஆதிகாலம் தோட்டேகாடாக இருந்தது போலிருக்கிறது. அந்தப் பிரமாண்டமான கோவிலைப் பார்த்து இன்று முழுவதும் வியந்துகொண்டேயிருந்தேன். நீங்கள் சொல்லும் அரசைப் பற்றியும் அங்கு நடந்த துன்ப நிகழ்ச்சிகளைப்பற்றியும் சொல்லுவீர்களா?' என்று கேட்டான் ஐரோப்பியன் ஆவலுடன்.

பழங்காலத்தில் அதோ அந்த மலையின் மறுபுறம் இருக்கும் மேட்டு நிலத்தில் ஒரு பெரிய நகரம் இருந்தது. மலைமேல் ஏறிப்பார்த்தால் கோட்டையின் ஒரு பகுதியும் அகழி இருந்த சின்னங்களும் இப்போது கூடத் தெரியும். சந்திரகுப்தன் என்ற அரசன் அந்த நகரத்தை ஆண்டு வந்தான். இந்த இடம் புண்ணியமானது என்பதை அவன் தான் முதலாவதாக அறிந்து இந்தக் கோவிலைக் கட்டுவித்தான். இதைக் கட்டுவதற்கென்றே பன்னிரண்டு ஆண்டுகள் தலைநகரையும் விட்டு விட்டு இங்கே வந்து முகாமிட்டிருந்தான். கோவில் வேலை முடிந்து நகரத்துக்குத் திரும்பியதும் அரண்மனையில் அழகான பெண்ணொருத்தியைக் கண்டு காதல் கொண்டான். பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன் கைக் குழந்தையாக இருந்த தன் சொந்த மகளே அவள் என்பதை அவன் அறிந்திருக்கவில்லை. அரசி அதை எடுத்துச் சொன்ன போது பொறாமையின் காரணமாக அவள் பொய் சொல்லுவதாக நினைத்து நம்ப மறுத்து விட்டான். காதல் தன் வயப்பட்டவர்களை மிருகமாக்கிவிடக் கூடியது. அது புறக் கண்களையும், அகக் கண்களையும் ஒருங்கே குருடாக்கிவிடும். தன்னடக்கத்துக்குப் பழக்கப்படாத அரசனால் காம வெறியைக் கட்டுப்படுத்த முடியவில்லை. பிரம்மராவதியைப் பல வந்தப்படுத்தினான். தன்னையும் தன் தந்தையையும் பெரும் பாவத்திலிருந்து விலக்கிக்கொள்வதற்காக பிரம்மராவதி ஆற்றில் விழுந்து உயிரை விட்டாள். நீர் இப்போது உட்கார்ந்து கொண்டிருக்கும் பாறையிலிருந்து தான் குதித்ததாகப் பாரம்பரியம் ஐரோப்பியன் தன்னையறியாமலே வேறொரு பாறைக்குத் தாவி உட்கார்ந்தான்.

அப்புறம் அந்த அரசன் என்ன ஆனான்?' என்று கேட்டான் கதை கேட்கும் ஆர்வத்துடன். அவள் மரணம் அவன் கண்களைத் திறந்தது. உண்மையை அறிந்து கொண்டதும் அதே பாறையிலிருந்து நீரினுள் பாய்ந்து உயிரை மாய்த்துக்கொண்டான்.'

என்ன பயங்கரம், என்ன பரிதாபம்' என்று உணர்ச்சி வசப்பட்டான் அந்த ஐரோப்பியன். ஆனால் சில வினாடிகள் கழித்து, 'உங்கள் நாட்டில் தான் இது போன்ற புராணக் கதைகளுக்குப் பஞ்சமே கிடையாதே. இதுவும் அதில் ஒன்று தானே?' என்றான்.

இது உண்மைதான் என்பதற்கு அதோ தெரியும் கோவிலும் அதிலுள்ள சிற்பங்களும் தான் சாட்சி. பிறகு அரசனும் இளவரசியும் உயிர்பெற்று கிருஷ்ணவேணியின் இருண்ட வயிற்றிலிருந்து வெளியே வந்தார்கள்' என்றார் துறவி. ஐரோப்பியனைப் பார்த்து: 'ஆமாம், நீங்கள் யார்? வேட்டைக்காகவா இவ்வளவு தூரம் வந்திருக்கிறீர்கள்? இந்த நாட்டில் வெகுகாலம் இருந்திருக்கமாட்டீர்கள் என்றே தோன்றுகிறது. ஆனால் ஹிந்துஸ்தானி அழகாகப் பேசுகிறீர்களே.' என்றார்.

நீங்கள் சொல்லுவது சரிதான். நான் இந்த நாட்டுக்கு வந்து இரண்டு ஆண்டுதான் ஆகிறது. கும்பினி காரியமாக கர்நூல் நவாபைப் பார்க்க வந்தேன். புகழ்பெற்ற இந்தக் கோவிலைப்பற்றிக் கேள்விப்பட்டேன். இந்தப் பக்கத்தில் கொடிய விலங்கு வேட்டை கிடைக்கும் என்றும் சொன்னார்கள். அப்படியே ஒரு வார விடுமுறையில் துப்பாக்கியை எடுத்துக்கொண்டு கிளம்பிவிட்டேன். ஆமாம், நீங்கள் யார்? இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?'

நான் ஒரு துறவி. அதனால் கடந்த கால வாழ்க்கையைப் பற்றிப் பேசுவதும், நினைப்பதும் கூட தகாது. நீங்கள் பிரெஞ்சுக்காரரா, டச்சுக்காரரா? இல்லை, இல்லை, ஆங்கிலேயர் தான் என்று நினைக்கிறேன்,' என்றார் பெரியவர். இதைக் கேட்டு ஆச்சரியம் அடைந்தான் ஐரோப்பியன்.

நான் ஆங்கிலேயன் தான். என் பெயர் லிட்டில்டன். ஆனால்

நான் ஆங்கிலேயன் என்று எப்படி ஊகம் செய்தீர்கள்?' என்று கேட்டான். பூர்வாசிரமத்தில் பரங்கியரை எனக்கு நன்கு தெரியும்,' என்றார் துறவி. பின் லிட்டில்டன் வைத்திருந்த துப்பாக்கியைக் கவனித்துவிட்டு, 'மிக அருமையான துப்பாக்கி, உங்கள் தளபதி ஒருவர் நிஜாம் நாசர்ஜங்குக்கு இதைப் போன்ற ஒரு துப்பாக்கியை அளித்தார். அதுவாகவே கூட இருக்கலாம் இது' என்றார்.

லிட்டில்டனுக்கு வியப்புத் தாங்க முடியவில்லை. இந்த அற்புதக் கிழவரைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவலும் அதிகரித்தது. 'நீங்கள் சொல்வது சரிதான், நிசாம் தான் இதை எனக்குக் கொடுத்தார். தஞ்சாவூரை விடுவிக்க நாங்கள் இருவரும் ஒன்றாகச் சென்றிருந்த போது அவருக்குச் செய்த ஒரு சிறு உதவிக்காக நினைவுப்பரிசாக இதை எனக்கு அளித்தார். ஆனால் உங்களுக்கு இதெல்லாம் எப்படித் தெரியும் என்பதை நீங்கள் எனக்கச் சொல்ல வேண்டும்' என்றார்.

தஞ்சாவூரை விடுவிக்கவா?' என்று வியப்பும் பரபரப்பும் நிறைந்த குரலில் துறவி வினவினார். தஞ்சையை யார் முற்றுகையிட்டது? எதற்காக? எப்படி முடிந்தது? தயவு செய்து அதைப்பற்றி முதலில் சொல்லுங்கள். துப்பாக்கியைப் பற்றி நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்.' தஞ்சாவூர் முற்றுகையில் கிழவர் காட்டிய பரபரப்பைக் கண்ட லிட்டில்டனுக்கு அவரைப் பற்றி அறிந்துகொள்ள வேண்டும் என்ற ஆவல் மேலும் அதிகமாகியது. ஆம்பூர்ச் சண்டைக்குப் பிறகு, பிரதாப்சிங் மராட்டியரை உதவிக்கு வரவழைத்ததைப் பழிவாங்கும் பொருட்டு சந்தாசாகிப் தஞ்சை நகரை முற்றுகையிட்ட விவரத்தைக் கூறினார்.

'நீங்கள் என்ன கதை சொல்லுகிறீர்கள்? சந்தாசாகிப் மகாராஷ்டிர சிறையில் அல்லவா அடைந்து கிடந்தான்?' என்றார் துறவி குறுக்கிட்டு. 'நான் ஒன்றும் கதை சொல்லவில்லை ஐயா' என்றார் லிட்டில்டன். 'நீங்கள் வெகுகாலமாக இந்தக் காட்டில் அடைந்து கிடக்கிறீர்கள் என்பது இப்பொழுது தெளிவாகத் தெரிகிறது. டூப்ளேயின் குறுக்கீட்டின் பேரில் மகாராஷ்டிர அரசன் சந்தாசாகிபை விடுதலை செய்தான். விடுதலையானதும் அவன் முஸாபர்ஜங்கோடு சேர்ந்து கர்நாடகத்தின் மேல் படையெடுத்து ஆம்பூர்ச் சண்டையில் நவாப் அன்வாருத்தீனைக் கொன்று விட்டான். பிறகு டூப்ளே அவனை ஆற்காட்டு நவாபாக நியமித்தான்." 'எப்படி முடிந்தது?' என்று துறவி கேட்டார்.

நிசாம் தஞ்சையை விடுவிக்க விரைந்திராவிட்டால், அது எளிதில் சந்தாசாகிப்பிற்கு இரையாகியிருக்கும். அவருக்கு உதவியாக ஆங்கிலேயரும் ஒரு கிளைப் படையை அனுப்பினார்கள். அந்தப் படைத்தலைவரின் அதிகாரிகளில் ஒருவனாக நானும் சென்றிருந்தேன். ஆனால் நாங்கள் சென்று சந்தாசாகிப்பை விரட்டுவதற்குள் அந்த எத்தன் அப்பாவி பிரதாப்சிங்கிடம் 46 லட்சம் ரூபாய்க்கு ஒரு வாக்குறுதி பத்திரம் எழுதி வாங்கி விட்டான்." நாற்பத்தாறு லட்சம் ரூபாய்க்கா?' என்று அங்கலாய்புடன் சொன்னார் துறவி. பிறகு தமக்குள்ளாகவே பாவம் பிரதாப்சிங், பாவம் பிரதாப்சிங்' என்று முணுமுணுத்தார்.

லிட்டில்டன், 'ஐயா நீங்கள் கேட்ட எல்லாவற்றையும் நான் சொல்லி விட்டேன். உங்கள் வாக்குப்படி துப்பாக்கி விஷயம் பற்றி இப்பொழுது நீங்கள் எனக்குச் சொல்லவேண்டும்' என்றார். துறவி ஆங்கிலேயனைக் கூர்ந்து பார்த்துக்கொண்டே, நீங்கள் இன்னும் எல்லாவற்றையும் சொல்லவில்லை. தகராறு நிச்சயம் அதோடு முடிந்திருக்க முடியாது. உங்கள் ஆட்களும் சரி, நிசாமும் சரி, சந்தாசாகிப்பைத் தொடர்ந்து ஆற்காட்டு நவாபாக இருக்க அனுமதித்திருக்கமாட்டீர்களே?' என்றார். 'அந்த விஷயம் இன்னும் முடிவாகவில்லை. இனிமேல் தான் முடிவு செய்வார்கள். பிரெஞ்சுக்காரர் சந்தாசாகிப்பை ஆதரிக்கிறார்கள். எங்களுக்கு தேவிகோட்டை கிடைத்து விட்டதில் அவர்களுக்கு மிகுந்த பொறாமை.'தேவிகோட்டை தஞ்சை அரசைச் சேர்ந்ததாயிற்றே! அது உங்களுக்கு எப்படிக் கிடைத்தது! பிரதாப்சிங்கிடம் சண்டையிட்டுப் பிடுங்கவில்லையே? பிரதாப்சிங் ஆங்கிலேயரோடு தானே கூட்டுச் சேர்ந்த நண்பனாக இருந்தான்?' 'அரசியல் நட்பு மது நட்பைப் போன்றது தானே?' என்றார் லிட்டில்டன் சிரித்துக்கொண்டே.

'பிரதாப்சிங் அப்படியொன்றும் எங்களிடம் தீவிர நட்புக் கொள்ளவில்லை. எங்களுக்கும் பிரெஞ்சுக்காரருக்கும் நடுவே மதில் பூனை போல் தான் உட்கார்ந்து கொண்டிருந்தார். காலமான ராஜாசாயாஜி எங்களோடு உறுதியான நட்பும் நன்றியுணர்வும் உடையவராக இருந்தார். ஆகவே அவர் மீண்டும் தஞ்சை அரியணை ஏறவேண்டுமென்று எங்கள் உதவியை நாடிய போது பிரதாப்சிங்குக்கு விரோதமாக அவருக்கு ஆதரவு அளிப்பதென்று முடிவு செய்தோம். மேஜர் லாரென்ஸ் தலைமையில் ஒரு படையை அனுப்பினோம். அது தேவிகோட்டையைப் பிடித்தது. அதற்குள்ளாக பிரதாப்சிங் எங்கள் பக்கம் சார்ந்து சமாதானம் கோரினார். பரிசாக தேவி கோட்டையை விட்டுக்கொடுத்தார்.'

மறுபடியும் துறவி, 'பாவம் பிரதாப், பாவம் பிரதாப்,' என்று இரக்கத்துடன் முணுமுணுத்தார். 'இப்பொழுது எல்லாவற்றையும் சொல்லிவிட்டேனா?' என்று சற்று உரத்துக் கேட்டார் ஆங்கிலேயர்.

மரியாதை தெரியாமல் கேள்விகள் கேட்பதாக நினைத்து மனஸ்தாபம் கொள்ள வேண்டாம். என்னுடைய பூர்வாசிரமத்தைப் பற்றிப் பேசுவதற்கு என் சந்நியாச விதிகள் இடந்தராது. ஆனாலும் சிலவற்றையாவது உங்களுக்குச் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன். நான் தஞ்சாவூர் அரசவையில் உயர்ந்த பதவியிலிருந்தேன். அப்பொழுது நான் இந்தத் துப்பாக்கியைப் பார்த்திருக்கின்றேன். எனக்குப் பழக்கமான நிசாமின் அதிகாரி ஒருவர் அதை வைத்திருந்தார். அதிலிருக்கும் பொற்பிறையை அடையாளம் கண்டு கொண்டேன். நிசாமுக்கு அது பரிசாகக் கிடைத்த பின் அவர் அந்தப் பொற்பிறையை அதில் பதித்ததாகக் கேள்விப்பட்டிருந்தேன். தஞ்சையின் விதியைப் பற்றிக் கவலையுடன் விசாரித்ததன் காரணம் இப்பொழுது ஒரு வேளை உங்களுக்குச் சிறிது புரியலாம்' என்றார்.

லிட்டில்டன் சிறிது நேரம் பெரியவரை வியப்புடனும் மரியாதையுடனும் பார்த்துக் கொண்டே இருந்தார். பிறகு, 'நான் கேள்விப்பட்ட புகழ் வாய்ந்த பிராமண மந்திரி நீங்கள் தான் என்று நினைக்கின்றேன். அவருக்குப் பரங்கிகளைப் பிடிக்காது என்றும், மகாராஜா அவர் கைக்குள் அடக்கம் என்றும் சொன்னார்கள். நாலைந்து வருடங்களுக்கு முன் குடும்பத்தில் நேர்ந்து விட்ட ஒரு பெருந்துன்பத்துக்குப் பின் அவர் மாயமாய் மறைந்து விட்டார் என்றும் சொல்லக் கேள்விப்பட்டேன்' என்றான். இருக்கலாம்' என்று மெல்லிய குரலில் பதில் வந்தது.

**தொடரும் ...**




# மெக்யேட் மருத்துவமனையும் இசபெல்லா கேர் அம்மையாரும்

கொத்தி பேய் – யாழ்ப்பாண வீடுகள்தோறும் சில தசாப்தங்களுக்கு முன்பு வரை பயந்திருந்த விடயம். குடும்பங்களில் ஒரு குழந்தை பிறந்தவுடன் ஐந்தாம் நாள் அக்குழந்தையை கொத்தி பேய் கொண்டு சென்று விடுமோ என்ற பயம் ஒவ்வொரு வீட்டிலும் இருந்தது. சரியான பரிகாரங்களை செய்தால் தான் அக்குழந்தையை காப்பாற்ற முடியும் என்ற நம்பிக்கை சமூகத்திற்குள் உருவாகி இருந்தது. மேலும் அப்பரிகாரங்களை செய்ய பிரசவம் பார்த்த மருத்துவச்சிகளுக்கு மட்டுமே தெரியும் என்ற பிம்பத்தை அக்கால மருத்துவச்சிகளும் தங்களுக்கு ஆதரவாக பயன்படுத்தி கொண்டார்கள்.

பிரசவ அறையிலே குழந்தை பிறந்தவுடன் கொத்தி பேய்க்கு பலவித கறிகளுடன் உணவு சமைத்து பிரசவம் பார்த்த மருத்துவச்சி மூலம் படைப்பார்கள். பிறகு அம்மருத்துவச்சி பந்தம் ஒன்றை பற்ற வைத்து தாயையும் பிள்ளையையும் 'நல்லா இருங்கோ நல்லா இருங்கோ' என வாழ்த்தி விட்டு சகல அறைகளிலும் “செத்தேக்க பத்தேக்க நில்லாத கொத்தியாத்த” என்று பாடுவாள். பிறகு, பேயை அழைத்து செல்கிறேன் என்று கூறி பிரசவம் நடந்த பாய், தலையனை, சேலை முதலியவற்றை சுருட்டிக் கொண்டு அப்படையல் உணவையும் ஒரு பெட்டியில் எடுத்துக்கொண்டு ஒரு பாழடைந்த இடத்தில் அவ்வுணவை வைத்து முகர்வாள். பிறகு, தன்னுடைய உணவை எடுத்து தன் வீட்டிற்கு செல்வாள். அவள் முகரவில்லையென்றால் அப்பேய் திரும்பவும் வந்து விடும் என்ற நம்பிக்கை. எனவே ஒவ்வொரு தாய்க்கும், அவள் சரியாக முகர்ந்தாலோ இல்லையோ, என்ற பயம் ஐந்தாம் நாள் வரை வாட்டி எடுக்கும்.

பிரசவித்த தாய்க்கு இப்பயம் மட்டும் பிரச்சனை அல்ல யாழ்ப்பாண சமூகம் பிரசவித்த தாயை ஒரு தீட்டாகவே முப்பத்தியொரு நாள் வரை பார்த்தது. எனவே, பிரசவித்த பிறகு தாயின் தீட்டு கழியும் வரை வீட்டை விட்டு வெளியே ஒரு குடிசையிலேயே தாயையும் சேயையும் தங்க வைத்தனர். வெயிலோ, மழையோ, அவர்கள் இருவரும் அங்கு தான் தங்க வேண்டும். காடுகள், கழனிகள், என்று சூழ்ந்திருந்த அக்காலத்தில், பூச்சிகள், பாம்புகள் என ஊர்வன பிரச்சனைகளுக்கும் முகம் கொடுக்க வேண்டும். அநேக நேரங்களில் இக்குடிசைகளில், தாயோ, சேயோ அல்லது இருவரும் இறந்த நேரங்களும் உண்டு.

இப்படிப்பட்ட சூழ்நிலையில் தான் சாவகச்சேரியில் அமெரிக்க மிசன் மூலம் 1880ம் ஆண்டு அருட்பணி செய்ய வந்த அமெரிக்க வெர்மன்ட் பகுதியை சேர்ந்த மேரி லீச், மார்கரெட் ஆகிய சகோதரிகளுக்கு யாழ்ப்பாண பெண்கள் மீது ஒரு கரிசனையை கடவுள் கொடுத்தார். மகப்பேறுக்காக சிறப்பு மருத்துவமனை ஒன்று துவங்குவதே யாழ்ப்பாண பெண்களின் மகப்பேறு பிரச்சனையை போக்க ஒரே வழி என விளங்கிக்கொண்டனர். மேலும், இம்மருத்துவமனை பெண்களால் துவங்கப்பட்டு, பெண்களால் நிர்வகிக்கப்பட்டு, பெண்களால் நடத்தப்பட வேண்டும் என முடிவு எடுத்தனர். தங்கள் மிசன் மூலம் இத்தரிசனத்தை நிறைவேற்ற முடியாத நிலையில், இந்தியாவில் ஊழியம் செய்து வந்த லண்டன் ஜெனானா மிசனில் இணைந்தார்கள்.

இருவரும், இங்கிலாந்து சென்று யாழ்ப்பாணத் தமிழ் பெண்கள் பிரசவ காலங்களில் கடந்து செல்லும் சங்கடங்களை பகிர்ந்தனர். ஒரு மகப்பேறு மருத்துவமனையின் தேவைகளையும்

எடுத்துரைத்தனர். தமிழ் பெண்கள் ஆண் மருத்துவரிடம் சிகிச்சை பெறமாட்டார்கள் என்பதனையும் எடுத்துக் கூறி, பெண் மருத்துவ மிசனரிகள் தேவை என்பதையும் விளம்பரப்படுத்தினார்கள். தேவன் அவர்களின் தாகத்தை அறிந்தவராய் அவர்கள் விருப்பத்தை நிறைவேற்றினார். ஒரு மகப்பேறு மருத்துவமனை கட்டுவதற்கு தேவையான பணத்தை மெக் லியோட் என்ற போதகர் குடும்பம் முழுவதுமாக பொறுப்பேற்றது. கனடாவை சேர்ந்த மேரி இர்வின் என்பவரும் ஸ்காட்லாந்து நாட்டை சேர்ந்த இசபெல்லா கேர் என்பவரும் மிசனரிகளாக முன் வந்தனர்.



இனுவில் - நீர்வளம், நிலவளம் நிறைந்த இயற்கை கொஞ்சும் கிராமம். லீச் சகோதரிகள் மருத்துவமனை கட்டுவதற்கு தெரிவு செய்த இடமும் இதுவே. அதேவேளையில், இர்வின் அம்மையாரும், கேர் அம்மையாரும், கொழும்பு வந்திறங்கினார்கள். இர்வின் அம்மையார் கொழும்பு நகரிலேயே தங்கிவிட தனது இருபது வயதுகளில் கேர் அம்மையார் யாழ்ப்பாணம் நோக்கி பயணித்தார்கள். மாத்தளை வரை மட்டுமே அக்காலத்தில் புகையிரத சேவை இருந்தது. பிறகு குதிரைவண்டி மூலமாகவே மீதம் 200 மைல் தூரம் பயணம் செய்ய வேண்டும். இந்தக்காலத்திலேயே யானை நடமாட்டம் அதிகம் உள்ள காட்டுப்பகுதி, அக்காலத்தை பற்றி யோசிக்கவே வேண்டாம். ஒரு இளம்பெண் தனியாக முன்பின் தெரியாத இடத்தில் மொழி தெரியாத ஊரில் தேவனுக்காக பயணித்தாள். ஒரு குதிரை வண்டியில் ஐந்து மைல் தான் செல்லலாம். வரைபடம் (Map) இல்லாத காலத்தில் மைல்கல் இல்லாத பாதையில் வண்டிகள் மாறும் போது அவளுடைய விசுவாசமே அவளுக்கு துணை நின்றது. மாத்தளை முதல் வவுனியா வரை 100 மைல்களும் அவளுடைய பயணங்கள் இரவுகளிலேயே அமைந்ததாக அவள் குறிப்பெழுதியிருக்கிறாள்.

இவ்வளவு தியாகத்துடன் வந்த கேர் அம்மையாருக்கு, இனுவிலை அடைந்தவுடன் ஏமாற்றமே அவர்களுக்கு காத்திருந்தது. ஒருவரும் அவரது பிரசவ சேவையை ஏற்கவில்லை. பல பிரயாசங்களுக்கு பின்பு ஒருநாள் மாட்டிற்க்கு பிரசவம் பார்க்க அழைத்திருந்தார்கள். அவரும் பொறுமையோடு மாட்டிற்க்கு பிரசவம் பார்த்தார். இரண்டாம் முறை, மாட்டிற்க்கு பிரசவம் பார்க்க அழைக்கும்போதே தான் மாட்டிற்க்கு பிரசவம் பார்க்க வரவில்லை எனவும் மனிதர்களுக்கே பிரசவம் பார்க்க வந்தேன் எனவும் திடமாக கூறினார்.

படிப்பறிவில்லா மருத்துவச்சிகள் மேலிருந்த பயமும், நம்பிக்கையும், சிறப்பான தேர்ச்சியுடன் எடின்பரோ பல்கலைகழகத்தில் மருத்துவ படிப்பையும், சத்திர சிகிச்சை நிபுணத்துவத்தை பேர்மிங்காம் பல்கலைகழகத்திலும் பெற்ற இசபெல்லா கேர் அம்மையார் மீது மாற்றுவது யாழ்ப்பாண தமிழ் பெண்களுக்கு சுலபமாக இல்லை. கேர் அம்மையாரின் விடாமுயற்சியும் இறையருளும், யாழ் மண்ணில் கிரியை செய்தன.

இன்றைக்கு, கொத்தி பேய் துரத்தும் மருத்துவச்சிகள் கூட்டமே வடு இல்லாமல் போய்விட்டது. கொத்தி மூலைகள் என்று இன்று கிராமங்களில் அழைக்கப்படும் சில பகுதிகள் மட்டுமே, மீதம் உள்ள நினைவுகள்.

பிரசவம் என்றாலே இனுவில் என்ற நிலை உருவாகியது. "பிள்ள நீங்கள் சுகமில்லாமல் (கற்பமாக) இருக்கிறியலோ" என்பதற்கு "இனுவிலுக்கு போக ஆயத்தமோ" என்று கேட்பதே யாழ் மண்ணில் வழக்கமாகியது. இனுவில் மருத்துவமனையில் பிரசவம் பார்க்க வரும் பெண், குடும்பத்தோடு வந்து தங்குவதற்கு வசதியாக அந்தக் காலத்திலேயே தனித்தனி வீடுகள் கட்டப்பட்டன. யாழ்ப்பாண தமிழ் பெண்களுக்கு பிரசவ காலம் மேலிருந்த பயம், கொத்தி பேய் திகில், தீட்டுக்கால வெறுப்பு அறவே நீங்க உதவி புரிந்தவர் கேர் அம்மையார் என்றால் மிகையாகாது. யாழ்குடா நாட்டின் கலாச்சாரத்தையே ஒரு தனி இளம் பெண்ணாக நின்று தேவ துணையுடன் மாற்றினார். நூற்பது ஆண்டுகள் எம் தமிழ் பெண்களுக்காக தியாகத்துடன் பணி செய்து மீண்டும் இங்கிலாந்து சென்ற போது 6வது ஜார்ஜ் மன்னன் பிரித்தானியா அரசினால் வழங்கக்கூடிய மிக உயர்வான விருதான MBE – Member of the British Empire' விருது வழங்கிச் சிறப்பித்தார்.

பல மிசன் நிலையங்கள் யாழ் மண்ணில் மறைந்துள்ள நிலையில் இன்று வரை கெம்பீரமாக நிற்கும் மெக்லியாட் மருத்துவமனை பல தியாக அருட்பணி சுவடுகளை கொண்டுள்ளது. விசேடமாக பெண் தாதியருக்கான முதல் சிறப்பு பயிற்சி இனுவில் வளாகத்திலேயே யாழ் மண்ணில் நடைபெற்றது.

இன்றைக்கு இளம் பெண்கள் எவற்றை சாதிக்க முடியும் என்ற கேள்விகளுக்கு பதிலாக தேசம் கடந்து, மிசன் நிறுவனம் கடந்து, தரிசனத்தைத் எவ்வாறு நிறைவேற்ற முடியும் என்பதற்கு சாட்சியாக இசபெல்லா கேர் அம்மையாரின் வாழ்க்கை உள்ளது என்பதில் எவ்வித ஐயமும் இல்லை.

**கிறிஸ்டி சாமுவேல், கொழும்பு**



# ஒன்று சேர்ந்து மீட்டெடுப்போம்!

தென்னிந்தியாவில் எங்குச் சென்றாலும் மிஷன் மருத்துவமனைகள் இருந்த காலம் உண்டு. கிறிஸ்துவின் நற்செய்தியை கூற வந்த வெளிநாட்டவர்கள் ஆத்தும தேவைகளை மட்டும் சந்தித்து சரீர மற்றும் சமூகத் தேவைகளை குறித்து கவலையற்றவர்களாக இருக்கவில்லை. உலகத்திற்கு உப்பாகவும் வெளிச்சமாகவும் இருப்பதே முழுமையான சுவிசேஷ பணி என்பதை உணர்ந்து செயல்பட்டனர். ஆலய வளாகங்கள் பள்ளிகளாகவும், மக்கள் தஞ்சம் புகும் இடங்களாகவும், பிணி தீர்க்கும் வைத்திய சாலைகளாகவும் அமைந்தன.

அம்ரிஸ்டர் ஊரில் ஒரு இந்து மனிதன் பின்வருமாறு Dr. ஹென்றி கிளார்க் அவரிடம் சொன்னதாக LMS ஆவணங்கள் கூறுகின்றன : "... உங்கள் பள்ளிகளால் எங்களுக்குப் பயமில்லை, எங்கள் பிள்ளைகளை அங்கு அனுப்ப தேவையில்லை, உங்கள் புத்தகங்கள் எங்களுக்கு பயமில்லை, நாங்கள் அவற்றைப் படிப்பதில்லை, உங்கள் பிரசங்கங்கள் கூட எங்களைப் பெரிதும் பயப்படுத்துவதில்லை அவைகளை நாங்கள் கேட்க அவசியமில்லை. ஆனால் நாங்கள் உங்கள் பெண்களையும் உங்கள் மருத்துவர்களையும் கண்டு பேரச்சம் கொள்கிறோம் – மருத்துவர்கள் எங்கள் உள்ளங்களைக் கொள்ளை கொள்கிறார்கள், பெண்கள் எங்கள் இல்லங்களைக் கவர்ந்து விடுகிறார்கள். எங்கள் உள்ளங்களும் எங்கள் இல்லங்களும் உங்களிடம் கொள்ளைப் போன பின் எங்களிடம் வேறென்ன இருக்கிறது."

இவர் பெண்கள் என்று குறிப்பது - வீடுகள் தோறும் சென்று வீட்டிலுள்ள பெண்களுக்கு உதவி செய்தும், எழுத்து படிப்பித்தும், மருத்துவ உதவிகளும் செய்து வந்த 'ஜெனானா' மிஷனரி பெண்களும், பைபிள் அம்மாக்களும். ஆக 1800களில் இவ்வாறாகப் பார்க்கப்பட்ட இருபெரும் ஊழியங்கள் இன்று வெகுவாக நலிந்து விட்டன.

சுதந்தரித்திற்கு பின் 50%க்கும் மேல் மிஷன் மருத்துவமனைகள் மூடப்பட்டதைப் பார்க்கலாம். இன்றும் தரமான மருத்துவம் எண்ணற்ற மக்களின் தேவையாக உள்ளது. வைத்தியம் கிடைத்தாலும், பரிசோதனைகள் செய்வதிற்கும் மருந்து வாங்குவதற்கும் பணம் போதியதாக இருப்பதில்லை. குடும்பங்கள் வியாதியின் பிடியில் சிதைந்து போவதைப் பார்க்கிறோம். 150ஆண்டுகளுக்கு முன் இருந்த கிறிஸ்துவர்களை விட இப்போது தமிழ்நாட்டில் அதிகமாக இருக்கிறோம் – எல்லாத் துறைகளிலும் செழிக்கவும் கடவுள் அருள் புரிந்துள்ளார். இருப்பினும் மிஷினரிகள் நமக்கு சேவை செய்த வகையில் நம்மால் இப்போது நம்மை சுற்றி இருக்கும் மக்களுக்கு ஏன் சேவைகளை நீட்டிக்க முடியவில்லை.

காலராவினாலும், விஷ காய்ச்சலினாலும் மடிந்தும் எண்ணற்ற மிஷனரிகள் தங்கள் வாழ்க்கையை தியாகம் செய்து இங்குவந்துபணி புரிந்து தமிழ்நாடு முழுவதும் மருத்துவமனைகளை கட்டி எழுப்பினார்களே. இதில் பல கட்டிடங்களும், அமைப்புகளும் பாழாய் இருப்பதற்கு கிறிஸ்துவர்களாகிய நாம் கடவுளிடம் என்ன பதில் கூறப்போகிறோம்? நமக்கு ஒப்புவிக்கபட்ட இந்த ஒப்பற்ற தாலந்துகளை நாம் மண்ணினுள் புதைத்து விட்ட பிரயோஜனம் அற்ற ஊழியக்காரர்களாக இருளை நோக்கி பயணித்து கொண்டிருக்கிறோமா?

தனி மனிதர்களாக நாம் எப்படி இதற்கு பொறுப்பு ஏற்பது – தனி மனிதர்களாக தானே நாமும் நம் முன்னோர்களும் இந்த மருத்துவ உதவிகளைப் பெற்றோம். நம்மில் பலர் மிஷன் மருத்துவமனைகளில் பிறந்தவர்கள் தானே? சிதிலமடையும் மருத்துவ மற்றும் கல்வி பணிகளை நாம் ஏன் எழுந்து கட்டவில்லை? நம்மிடம் பரிசுத்த ஆவியானவரின் துணை உண்டே, ஆற்றல்மிக்க வழிகளில் தேவையான பணம் திரட்டலாமே? குழுக்களாகத் திரண்டு, செயல்திட்டங்கள் வரைந்து கணக்கொப்புவித்தலோடு சேவைகளை மீட்டெடுக்கலாமே.

நமக்கு இந்த சேவைகளை கொண்டு வந்த மிஷனரிகள் எல்லாத் தேவைகளையும் ஜெபத்தினாலும், கடுமையான முயற்சிகளினாலும் கொண்டு வந்தார்கள். பஞ்சங்கள், கொள்ளை நோய்கள், எதிர்ப்புகள் மத்தியில் உறுதியும் விசுவாசமும், கட்டுப்பாடும், உண்மையும் அவர்களுக்குப் பலம்.

என் சிறுவயதில் அதிகமாக என்னை கவர்ந்த இடங்களில் ஒன்று CSI Rainy Hospital, அதன் விசாலமான புல் தரைகள்; அங்கு வெள்ளை உடை அணிந்து எப்போதும் சுறுசுறுப்பாகச் சேவை செய்த செவிலியர்; அர்ப்பணிப்போடு பணிபுரிந்த மருத்துவ வல்லுநர்கள்; எந்நேரமும் நிரம்பி வழிந்த மக்கள் கூட்டம். 1980களிலேயே 200 படுக்கை வசதியுடன் வடசென்னை மக்களுக்கு ஒளியாக விளங்கிய இந்த மருத்துவமனை, இப்போது ஒளியிழந்து விரல் விட்டு எண்ணக்கூடிய படுக்கைகள் மட்டும் நிரம்பும் நிலையில் உள்ளது. பாழடைந்த கட்டிடங்களோடு பரிதாபமாகக் காணப்படுகிறது. தமிழ்நாடெங்கும் இது போல் ஆங்காங்கே மூடப்பட்ட மிஷன் மருத்துவமனைகளை காணலாம்.

இந்த மருத்துவமனையை 1888ல் உருவாக்கியது ஸ்காட்டிஷ் மிஷனின் மெடில்டா மக்பெயில் மருத்துவர் கடைசி வரை திருமணம் புரியாமல் பெண்களின் நலத்திற்கும், பிரசவகால மருத்துவத்திற்கும், குழந்தைகள் நலத்திற்கும், தொழுநோயாளிகளுக்கும் கிறிஸ்துவின் அன்பைச் செயலினால் காண்பித்தார். 20 ஆம் நூற்றாண்டின் இறுதியில் எய்ட்ஸ் நோயினால் அவதிப்பட்டவர்களுக்குப் பாகுபாடின்றி சிகிச்சையளித்து சமூக தொண்டாற்றியது. CSI ரேய்னி பன்முக சிறப்பு மருத்துவமனையாக கிறிஸ்துவின் கொடி பறக்க சேவை செய்த வருடங்கள் பல.

என்ன நிலையில் இருந்தாலும் மீட்கலாம் என்பது என்னுடைய ஆழமான நம்பிக்கை. கிறிஸ்துவர்களாகிய நாம் அனைவரும் சேர்ந்து செயல்பட்டால் முடியும். மிஷனரிகள் நமக்கு முன்மாதிரியாக செய்முறைகளை விட்டுச் சென்றிருக்கிறார்கள். புதுயுக தொழில் நுட்பங்களும், தகவல் பரிமாறும் சாதனங்களும், நிதி திரட்டும் வலிமையும் நம்மிடம் உண்டு. நாம் கவனத்தில் கொள்ள வேண்டியது கீழ் வருமாறு:-

**முதலில் சேவை :** மிஷன் மருத்துவமனைகள் முதலில் எல்லா மக்களுக்கும் தரமான மருத்துவ சிகிச்சையளிக்கும் சேவை ஸ்தலங்களாக இருக்கவேண்டும். மிஷன் மருத்துவமனைகள் நிதி திரட்டும் இடங்கள் அல்லவென்ற எண்ணம் எல்லாரிடமும் வேண்டும்.

**வெளிப்படைத்தன்மை:** மிஷன் மருத்துவமனைகளின் கணக்குகள் ஆரம்பமாகி சுதந்திரம் வரை வருடாந்திர வரவுகள் இன்றளவும் இணையத்தளங்களில் காணலாம். இதே போல் நாம் இன்றும் வருங்காலங்களிலும் செய்ய வேண்டும். அலுவலகமும், நிர்வாகமும் தணிக்கைக்கு நாமே உட்படுத்த வேண்டும். நம்மை நாமே சீர்படுத்திக் கொள்ள வழிமுறைகளை பின்பற்ற வேண்டும்.

**பணி நியமனங்கள்:** கடவுளுக்கும் மனிதருக்கும் முன்பாக பணியமர்த்தும் செயல்முறைகள் ஒப்பற்றதாக இருத்தல் தேவை. தனிமனித முடிவுகளாக இருக்காமல் வெளிப்படையாகவும் நியாயமாகவும் இருத்தல் அவசியம்.

**தேவை அறிதல்:** காலத்திற்கு ஏற்ப நோய்களும் மாறுகின்றன. முன்பு போல் தொழுநோய், போலியோ, காசநோய் பாதிப்புகள் இல்லை. மருத்துவமனைகள் இப்போதுள்ள தேவைகளை ஆராய்ந்து முற்போக்கோடு செயல்பட வேண்டும்.

**பராமரிப்பு:** மருத்துவமனை வளாகங்களில் தொடர்ச்சியான பராமரிப்பு அவசியம். 100 ஆண்டுகளுக்கும் மேலாக நிற்கும் கட்டிடங்கள் கிறிஸ்துவ சேவைக்கும் அன்பிற்கும் ஆதாரங்கள். அவை நம் நாட்டில் பாதுகாக்கப்பட வேண்டிய பாரம்பரிய அடையாளங்களாகவும் பார்த்தல் அவசியம். இவற்றைப் புதுப்பித்து உபயோகிக்கச் சிறப்பான வல்லுநர்கள் உண்டு (conservation architects) அவர்களின் உதவியோடு இன்னும் நூற்றாண்டு காலம் அவை சேவைக்கு உதவும்.

**சுத்தம்:** நம் ஆலயங்களை சுத்தமாக வைப்பது போலவே கடவுளின் நாமத்தினால் செய்யும் எல்லா பணியிடங்களையும் சுத்தமாக வைப்பது நம் கடமை, நம் சாட்சி.

அன்று சீருடன் நடந்த பணிகள் நாம் இன்றும் செய்யலாம். அன்றும் இன்றும் நம் தேவன் மாறாதவர். அவர் நியாயத்திற்கு ஜெயங்கிடைக்கப் பண்ணுகிறவரைக்கும், நெரிந்த நாணலை முறிக்காமலும், மங்கி எரிகிற திரியை அணைக்காமலும் இருப்பார். சிந்திப்போம், செயல்படுவோம்,

Rhoda Alex

In 1901 the largest medical mission in the world was at Neyoor, under the London Missionary Society. There was a hospital with fifteen dispensaries, and eighteen native medical evangelists. In 1899 the cases treated were 109,029. It began in 1830's under Dr. Ramsay and by Gods grace the hospital is still present in 2021.

(Image from the book Opportunities in the path of the Great Physician)



NEYOOR DISPENSARY.




CSI Rainy Hospital

நம் பகுதியில் பணியாற்றிய

# மருத்துவ மிஷனரிகள்

மேலை நாடுகளிலிருந்து நம்முடைய பகுதிக்கு வருகை தந்த மிஷனெரிமார்களுள் பலர் ஊழியப் பணிகளோடு கூட மருத்துவப் பணியிலும் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டு மக்களின் நல்வாழ்விற்கு அரும்பாடுபட்டனர். உலகில் எங்குமில்லாத அளவிற்கு அதிகமான மருத்துவ மிஷனெரிப் பணிகள் இந்தியாவில் நடந்தேறியுள்ளனவென்றே வரலாற்றுத் துணுக்குகள் தெரிவிக்கின்றன. அவற்றுள் அதிகமான மருத்துவ மிஷனெரிகளை தமிழ்நாடு தன்னகத்தே கொண்டிருந்தது என்பது வரலாற்றுப் பெருமையாகும். இவ்வாறான மருத்துவ மிஷனெரிப் பணிகள் தனித்துவமாக மற்றும் வேறுபாடுகளற்ற முறையில் செயலாற்றி, பலதரப்பட்ட மக்களின் சரீரப்பிணிகளை நீக்கும் கருவியாக செயல்பட்டுக் கொண்டிருந்திருக்கின்றது. அம்மருத்துவப் பணிகளின் விரிவாக்கப் பட்ட கட்டமைப்பை நாம் இப்பொழுதும் நம் பகுதியிலே காணலாம்.

**அருள்திரு. ஸ்ட்ராஹன் Rev. Dr. Strachan, M.D.,**

ஏறத்தாழ இருநூறு ஆண்டுகளுக்கு முன் நாசரேத் மற்றும் அதனை சுற்றியுள்ள மக்கள் சரியான மருத்துவ வசதி இல்லாமல் கொடிய நோய்களுக்கு இரையாக்கிக் கொண்டிருந்தனர். சுதேச வைத்தியர்களால் கைவிடப்பட்டு, செய்வதென்னவென்று தெரியாமல் திகைத்து நின்ற அப்பகுதி மக்களுக்கு அருள்திரு. ஸ்ட்ராஹன் என்ற ஸ்காட்லாந்து இளைஞரின் வருகை வரப்பிரசாதமாகவே அமைந்தது.

இவ்வாறு தன்னை மிஷனெரியாக அர்ப்பணித்து நாசரேத்திற்கு வருகை புரிந்த அருள்திரு. ஸ்ட்ராஹன் ஐயரவர்கள் இப்பகுதி மக்களின் கொடுந்துயரை பார்க்கலானார். நோய்த்தொற்றுகள் மற்றும் காலரா காரணமாக இறந்தவர்களின் எண்ணிக்கை அவருக்கு வருத்தத்தை அளித்தது. இப்பகுதி மக்களுக்கு மருத்துவ சேவை எவ்வளவு அதிகமான தேவையென்றுணர்ந்த அவர், மருத்துவ மிஷனெரியாக சேவையாற்ற எண்ணி சென்னை மருத்துவக் கல்லூரியில் சேர்ந்தார். படிப்பின் தரம் குறித்து அவர் அதிருப்தி அடைந்ததால், சென்னையை விட்டு வெளியேறி ஸ்காட்லாந்திற்குத் திரும்பி எடின்பர்க் மருத்துவக் கல்லூரியில் சேர்ந்தார். பின்பு தன்னை ஆக்கபூர்வமாக மருத்துவப்படிப்பில் ஈடுபடுத்திக்கொண்டுத் திறம்பட செயலாற்றி எம். டி. பட்டம் பெற்று மருத்துவரானார்.

**உலகின் மூன்றில் ஒரு பகுதியின் ஆட்சியாளராக இருந்த விக்டோரியா மகாராணிக்குத் தனிப்பட்ட மருத்துவராகப் பணியாற்ற அவருக்கு அளிக்கப்பட வாய்ப்பினை நிராகரித்தார். இது இங்கிலாந்து மக்களை வியப்பில் ஆழ்த்தியது. அவரோ இந்தியா திரும்பி, 1870ல் நாசரேத்தில் தன்னுடைய மருத்துவ ஊழியத்தை செயல்படுத்த முனைந்தார்.**

நாசரேத்திற்கு தேவையாயிருந்த மருத்துவமனையை 1870ல் தொடங்கினார். இவ்வாறாக ஸ்ட்ராஹன் ஐயரவர்கள் தொடங்கிய மருத்துவமனையில், அவருக்குதவியாக கால்டுவெல் ஐயரவர்களின் மகளான திருமதி. லூயிஸா ஷெப்பெர்ட் அவர்களும் மேலும் இரண்டு உதவியாளர்களும் பணியாற்றி வந்தார்கள். ஸ்ட்ராஹன் ஐயரவர்களின் முயற்சியால், ஏழை எளிய மக்களுக்கு எப்பொழுதுமே இலவசமாக வைத்தியம் பார்ப்பதை வழக்கமாகக் கொண்டிருந்த இம்மருத்துவமனையின் சேவை பலதரப்பட்ட மக்களின் பிணி போக்க பேருதவியாக இருந்திருக்கின்றது.

1871ம் ஆண்டில் மட்டும் ஏறத்தாழ 4,000 நோயாளிகள் சிகிச்சை பெற்றார்கள் என்றும், அவர்கள் சுமார் 40 முதல் 80 மைல் தொலைவிலிருந்து வந்தவர்கள் என்றும் வரலாற்றுக் குறிப்புகள் எடுத்துரைக்கின்றன. பாகுபாடுகள் ஏதுமில்லாத மருத்துவப்பணி ஆற்றுவதில் இம்மருத்துவமனை மாதிரியாக திகழ்ந்து கொண்டிருந்திருக்கின்றது. நாசரேத்தைச் சுற்றியுள்ள நாற்பதுக்கும் மேற்பட்ட கிராம மக்களுக்கு மருத்துவ சேவையை வழங்குவதில், பணக்காரர்கள், ஏழைகள் மற்றும் சாதி, மத பேதம் இல்லாத வகையில் இம்மருத்துவமனை ஆற்றிய சேவை பலதரப்பட்ட மக்களின் வாழ்வில் ஒளியேற்றியுள்ளது.

இவ்வாறு மருத்துவ ஊழியத்தில் தன்னை ஆக்கப்பூர்வமாக ஈடுபடுத்தி அதில் வெற்றி கண்ட அருள்திரு. ஸ்ட்ராஹன் ஐயரவர்கள் 1876ல் சாந்தோமுக்கு பணியிட மாற்றம் செய்யப்பட்டார். ஸ்ட்ராஹன் ஐயரவர்கள் தொடங்கிய அவ்வரும்பணியில் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்ட கனோன் ஆர்தர் மார்காஷிஸ் ஐயரவர்கள், அம்மருத்துவமனை நன்கு வளர்ச்சியடைய அயராது உழைத்தார். இவர் காலத்தில் புதிய கட்டடம் கட்டப்பட்டு, 18-10-1892 அன்று பரி.லூக்கா மருத்துவமனை எனப் பிரதிஷ்டை செய்யப்பட்டது. இம்மருத்துவமனை இன்றும் நாசரேத்தில் அரும்பணியாற்றிக் கொண்டிருக்கிறது என்பது குறிப்பிடத்தக்கது.

**அருள்திரு. கனோன் ஆர்தர் மர்காஷிஸ்**
**Rev Canon Arthur Margoschis**

திருநெல்வேலி பகுதியில் S.P.G ஊழியம் தாழ்ந்த நிலையிலிருந்த காலம் அது. 1876, ஜீன் மாதம் இடையன்குடியில் J.L வயட் ஐயரவர்களும், சாயர்புரத்தில் T. ஆதம்சன் ஐயரவர்களும் இராமநாதபுரத்தில் G. பில்லிங் ஐயரவர்களும், என்று மூன்றே மூன்று மிஷனெரிமார் தான் சுமார் 2500 சதுர மைல் பிரதேசத்தில், 11 சேகரங்களிலும் ஏறத்தாழ 25 உபசேகரங்களிலுமிருந்த நூற்றுக்கணக்கான சபைகளையும் பள்ளிகளையும் மேற்பார்த்துக் கொண்டிருந்தார்கள். சிறப்பாக மிஷனெரி பணி செய்து கொண்டிருந்த பேராயர் கால்டுவெல் ஐயரவர்கள் விடுமுறையில் இங்கிலாந்து சென்றிருந்த சமயம் லண்டன் மாநகரில் ஒரு நாள் கால்டுவெல் ஐயர் நிகழ்த்திக்கொண்டிருந்த பிரசங்கத்தை கேட்டு உள்ளம் நெகிழ்ந்தார். மருத்துவ மாணவரான ஆர்தர் மார்காஷிஸ் என்ற வாலிபர். இவர் இங்கிலாந்து தேசத்தில் கேன்டர்பரி நகரில் அமைந்துள்ள செயின்ட் அகஸ்டின் கல்லூரியில் (St. Augustine's College in Canterbury)



இறுதி ஆண்டு மருத்துவம் பயின்று கொண்டிருந்தார். கால்டுவெல் ஐயரவர்கள் அறைகூவல் செவிகளில் விழுந்த போது அதை ஏற்க துடித்த சிலரில் அவரும் ஒருவர். ஆனால், அவ்வழைப்பினை கடவுளின் அழைப்பாக ஏற்று தன்னை மிஷனெரிப் பணிக்கென அர்ப்பணித்தவர் அவர் ஒருவரே.

இறுதி ஆண்டு மருத்துவ மாணவராக இருந்த மர்காஷிஸ் ஐயரவர்கள் மருத்துவப்படிப்பை பாதியிலே நிறுத்தி விட்டு, படிப்பும் பட்டமும் இருக்கட்டும் இப்போதிருக்கிற படிப்பும் அறிவும் மருத்துவ ஞானமும் போதும் என்று கடவுளின் அரும்பணிக்காக செல்ல முற்பட்டார். இன்னும் ஓராண்டு தாமதித்து, மருத்துவப்படிப்பின் இறுதித் தேர்வுகளை எழுதி பட்டங்களை பெற்றுக் கொண்டு திருநெல்வேலிக்குப் போகலாமென்ற அவருடைய உறவினர்கள் மற்றும் நண்பர்கள் கொடுத்த ஆலோசனைகளையும் ஏற்க மர்காஷிஸ் ஐயரவர்களுக்கு மனம் வரவில்லை.

திருநெல்வேலி பகுதிக்கு மிஷனெரிமார் உடனடியாக தேவைப்படுகிறார்கள் என்று உடனே புறப்பட்டு 1875ம் ஆண்டு அக்டோபர் 26ம் நாளன்று சென்னை வந்தடைந்தார் மர்காஷிஸ் ஐயரவர்கள். மிஷனெரிப் பணியினை கற்றுக்கொள்ளும் நோக்கில் இடையன்குடியிலிருந்த கால்டுவெல் ஐயரவர்களிடம் அனுப்பி வைக்கப்பட்டார். அங்கு அவர் நடத்தி வந்த பணிகளை நேரில் பார்த்து, பயிற்சியும் அனுபவமும் பெற்று வந்த மர்காஷிஸ் ஐயர், தான் மருத்துவ மாணவராயிருந்தபடியினாலே நோயுற்றோருக்கு மருத்துவ உதவிகள் தந்து கால்டுவெல் ஐயரவர்கள் நடத்தி வந்த அரும்பணியை ஆராய்ந்தறிந்து கொண்டார். அப்படியே தன்னை மிஷனெரிப் பணிக்கென ஆயத்தப்படுத்திக்கொண்ட மர்காஷிஸ் ஐயரவர்கள், கால்டுவெல் ஐயரவர்கள் பரிந்துரையின்படி நாசரேத்தின் மிஷனெரியாக 1876ம் ஆண்டு நியமிக்கப்பட்டார்கள்.

நாசரேத் வந்தடைந்த மர்காஷிஸ் ஐயரவர்கள், அப்பகுதி மக்களின் தேவையறிந்து, ஊழியங்களோடு கூட மருத்துவப்பணியிலும் தன்னை முழு ஈடுபாட்டுடன் செயல்படுத்திக் கொண்டார். நாசரேத்தில் ஸ்ட்ராஹன் ஐயரவர்களால் ஆரம்பிக்கப்பட்ட மருத்துவமனை வளர்ச்சியடைய அயராது உழைத்தார். மருத்துவமனைக்கென்று புதிய கட்டடம் கட்டப்பட்டு பரி.லூக்கா மருத்துவமனை என்று பிரதிஷ்டை செய்யப்பட்டதும் இவர் காலத்தில்தான்.

மருத்துவ ரீதியாக தகுதி வாய்ந்த மர்காஷிஸ் ஐயரவர்கள் மருத்துவத்திலும், இரண சிகிச்சை முறைகளிலும் கைத்தேர்ந்தவராக இருந்தார்கள். நாசரேத் மருத்துவமனையைத் தேடி ஸ்ரீவைகுண்டம், ஆழ்வார்திருநகரி, திருச்செந்தூர், சாத்தான்குளம், திசையன்விளை முதலிய தொலைவிலுள்ள பல ஊர்களிலிருந்து வைத்தியம் பார்க்க வருகை தந்தனர். இவ்வாறான பலதரப்பட்ட மக்களும் தங்களுடைய மருத்துவத் தேவைக்காக நாசரேத்தை நாடினர். மேலும் சிலர் அவர்களுடைய வியாதியின் நிமித்தமாக நாசரேத்தில் தங்கி வைத்தியம் பார்க்கும் சூழ்நிலை ஏற்பட்டது. சில குறிப்பிட்ட வகுப்பு மக்கள் அவ்வாறாக தங்கி வைத்தியம் பார்ப்பதில் பல சிரமங்களுக்குள்ளாவதை அறிந்த மர்காஷிஸ் ஐயரவர்கள், வியாதியஸ்தரின் சிகிச்சை முடியும் வரையில் அவர்கள் குடும்பமாக தங்கி வைத்தியம் பார்க்கும் வகையில் சிறிய வீடுகளைக் கட்டி உதவினார்.

1880ம் ஆண்டு மாவட்ட ஆளுநரும், மாவட்ட இரண சிகிச்சை மருத்துவரும் (Direct Surgeon) மருத்துவசாலைக்கு வருகை தந்தனர். அவர்கள் கண்ட எல்லாவற்றையும் குறித்து பாராட்டினர். மருத்துவமனை சுத்தமாகவும், சிகிச்சைகளனைத்தும் ஒழுங்கான முறைகளுள்ளதாயும் காணப்படுகிறது என்று குறிப்பிட்டுள்ளார்கள். மர்காஷிஸ் ஐயரவர்கள் காலத்தில், மருத்துவம் பார்க்க வந்த மக்கள் சாதி, மத பேதம், வகுப்பு வித்தியாசம் ஏதுமின்றி மருத்துவம் பெற்றார்கள் என்றும், ஐயரவர்கள் தானே தினந்தோறும் நேரில் வியாதியஸ்தர்களை மருத்துவமனை சென்று பார்த்து மருத்துவம் செய்திருக்கின்றார்கள் என்றும் வரலாற்றுக் குறிப்புகள் எடுத்துரைக்கின்றன. அம்மருத்துவமனையின் சீரிய பயன் அதில் மருத்துவம் பெற வந்த பிணியாளிகளின் எண்ணிக்கைகளிலிருந்து நன்கு விளங்குகிறது. 1879-1880ல் அவ்வெண்ணிக்கை 20991 ஆகவும் பின்னர் 1880-1881ல் 38995 ஆகவும் அதிகரித்திருக்கின்றது.

முப்பத்திரண்டு ஆண்டுகளாக நாசரேத்தில் தனது மிஷனெரி பணியை நிறைவேற்றிய மர்காஷிஸ் ஐயரவர்களின் மருத்துவப் பணிகளின் தாக்கம் இன்றும் பலரின் வாழ்வில் சரீரப் பிணியைப் போக்கும் ஆதாரமாக திகழ்ந்து கொண்டிருக்கிறது.

**அருள்திரு. ஹென்றி கான்ஸ்டான்டினோ ஹக்ஸ்டபிள்**
**Rev. Henry Constantino Huxtable**

நம் பகுதியில் நிறைவேற்றப்பட்ட மருத்துவ மிஷனெரிப் பணியைப் பற்றி சிந்திப்போர் யாரும் ஹக்ஸ்டபிள் ஐயர் அவர்களை தவிர்த்து செல்ல இயலாது.

ஹக்ஸ்டபிள் ஐயரவர்கள் நம் பகுதிக்கு செய்த பெருஞ்சேவை மருத்துவ சுவிஷேசப் பணியை ஆரம்பித்து வைத்ததாகும். இவரே நம் பகுதியில் மருத்துவ மிஷனெரிப்பணியில் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியதில் முன்னோடியாக காணப்படுகின்றார்.

S.P.G மிஷனெரி சங்கத்தின் மிஷனெரியான ஹக்ஸ்டபிள் ஐயரவர்கள், கனம் பெஸ்ட் ஐயரவர்களைத் தொடர்ந்து 1852ல் இருந்து கிறிஸ்டியாநகரத்தில் பணியாற்றினார்கள். பின்னர் இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு சாயர்புரத்திற்கு மாற்றப்பட்டார்கள். இங்கு மருத்துவ மிஷனெரி சேவையினை சுதேச மருந்துகளைப் பயன்படுத்துவதன் மூலம் அறிமுகப்படுத்தினார்கள். பின்னர் 1854ல் அங்கேயே ஒரு மருத்துவமனையை நிறுவி, மருத்துவ ஊழியத்தை மேம்படுத்தியது அப்பகுதி மக்களுக்கு பேருதவியாக இருந்தது. அம்மருத்துவ சுவிஷேசப் பணியின் சிறிய தொடக்கத்திலிருந்து செயின்ட் ரபேல் மருத்துவமனை வளர்ந்தது. சாயர்புரத்திலிருந்து வளர்ந்து பெருகிய இம்மருத்துவ சுவிசேஷம் 1877-1879ம் ஆண்டுகளில் தாக்கிய பஞ்சத்தையும், தொடர்ந்து தொற்று நோய்கள் வெடித்த போதும் மக்களுக்கு பேருதவியாக இருந்துள்ளது.

பெண்களுக்கான மருத்துவப்பணி என்பது சரியான வகையில் செயல்படுத்தப்படாத அக்காலத்தில், ஐயரவர்களின் முயற்சியால் பல மருத்துவப்பணிகள் பெண்களுக்கு சென்றடைந்திருக்கின்றது. பிரசவ நேரத்தில் பெண்களுக்கு பராமரிப்பு வழங்க ஒரு முக்கியமான சேவை நிறுவப்பட்டது. குறிப்பாக, அருள்திரு ஹக்ஸ்டபிள் அவர்கள் ஆரம்பித்த மருத்துவ மிஷனெரிப் பணியானது, கர்ப்பிணி பெண்களைப் பார்வையிட்டு தேவையான மருத்துவ ஆலோசனைகளை வழங்கக்கூடிய மருத்துவச்சிகளை வழங்கின.

அக்காலங்களில் எந்த ஒரு அடிப்படை மருத்துவ வசதியும் இல்லாத நிலையில், மருத்துவ கட்டமைப்பை மக்களுக்கு ஏற்படுத்தி இன்றைய தூத்துக்குடி மற்றும் திருநெல்வேலி மாவட்டத்திற்குள் அநேக மருத்துவமனைகள் அமையச் செய்து அனைத்து மக்களுக்கும் மருத்துவ சேவை ஏற்படுத்திக் கொடுத்த பெருமை கனம் ஹக்ஸ்டபிள் ஐயரவர்களையே சாரும். ஐயரவர்கள் சாயர்புரம், நாசரேத், கிறிஸ்தியாநகரம், நாகலாபுரம், ராமநாதபுரம் ஆகிய இடங்களில் வைத்தியசாலைகள் அமைத்து மருத்துவ ஊழியத்தினை நிறைவேற்றியிருக்கிறார்கள்.

இவர் ஆரம்பித்து வைத்த மருத்துவ சுவிசேஷச் சேவையின் மேம்பாட்டை மதித்த பின் வந்த மிஷனெரிமார்கள் இவ்வரும்பணியினை தொடர்ந்து மேம்படுத்த ஏதுவாயினர்.

கிறிஸ்தவ வரலாற்று ஆசிரியரான கனம் D.A.கிறிஸ்துதாஸ் ஐயரவர்கள் ஹக்ஸ்டபிள் ஐயரவர்களைக் குறித்து, "வைத்தியசாலைகளை அமைத்து உன்னத கிறிஸ்தவச் சேவையாற்றி, இம்முறையை நம் அத்தியஷாதீனத்தில் ஆரம்பித்து வைத்த ஹக்ஸ்டபிள் ஐயருக்கு நமது அத்தியஷாதீனம் என்றும் கடமைப்பட்டுள்ளது" என்று எழுதியிருக்கின்றார்கள்.

இவ்வாறு மருத்துவ ஊழியத்தில் தங்களை ஆக்கப்பூர்வமாக ஈடுபடுத்திக்கொண்டு மிஷனெரிகள் செயல்பட்டதன் விளைவு தான் நாம் நம் பகுதியிலே பார்க்கும் மருத்துவக் கட்டமைப்பிற்கு வித்தாக அமைந்ததென்று சொன்னால் அது மிகையாகாது. இவ்வாறாக, மிஷனெரிமார்கள் ஆன்மீகப் பிணிகளுக்கு மற்றுமின்றி சரீரப் பிணிகளுக்கும் மருந்தூட்டி அரும்பணியாற்றியது வரலாற்றுப் பக்கங்களில் போற்றுதற்குரியதாகவே காணப்படுகின்றது.

**ஜெனோ செல்வகுமார் C,**
**அணைத்தலை**

# கொள்ளை நோய் மத்தியிலும் ரேனியஸ் ஐயரின் மன உறுதி

19 ஆம் நூற்றாண்டில் பல உயிர்களை பறித்த கொள்ளை நோய் காலரா. வங்காளத்தில் தொடங்கிய இந்த தொற்று, பின்னர் 1820 ஆம் ஆண்டு இந்தியா முழுவதும் பரவியது. அதன் தாக்கத்தால் பல லட்சம் மக்கள் உயிரிழந்தனர். திருநெல்வேலியில் ஏற்பட்ட பாதிப்பால் மக்கள் காடுகளில் தஞ்சம் புகுந்தனர். திருநெல்வேலி நகரில் ஒரே நாளில் ஐம்பது முதல் எழுபது பேர் வரை மரித்தனர். இதனை கண்டு வேதனையுற்ற ரேனியஸ், துண்டு பிரசுரங்கள் மூலம் மக்களிடன் விழிப்புணர்வுடன் சரீர, ஆத்தும நன்மைகளுக்கு தேவையான ஆலோசனைகள் வழங்கினார். தன்னால் இயன்ற மருத்துவ உதவிகளைச் செய்தார். திருநெல்வேலி நகர் முழுவதும் அழுகுரல் ஒலித்த போதும், நகர சபை மக்கள் யாருமே இந்நோய் தொற்றால் பாதிக்கப்படவில்லை.

இது ரேனியஸ் ஐயரின் அர்ப்பணிப்புக்கும், தொடர் உழைப்புக்கும் கிடைத்த வெகுமதி.

**கொள்ளை நோய் வந்தாலும், மரணமே நெருங்கி வந்தாலும் கர்த்தருக்கும், அவருடைய பிள்ளைகளுக்கும் ஊழியம் செய்த ரேனியஸ் ஐயரின் மன உறுதி நம்மிடம் இருக்கிறதா?**
**நான் பாதுகாப்பாக இருக்கிறேன் எனக்கென்ன என்று அலட்சியமாய் இருக்கிறோமா?**
**கொரோனா கூட நம்மிடம் தோற்றுப் போகும்; கடவுளுக்காக அர்ப்பணிப்புடன் வாழ்ந்தால்...**
**அர்ப்பணிப்போம்... செயல்படுவோம்...**

I J ஜெபராஜ்



# திரும்பிப் பார்ப்போம்!

**மோ.ஜோ. முதலூர்**

டாக்டர் ஐடா ஸ்கடரைப் பற்றி கேள்விப்படாதோர் யாருமே இருக்கமாட்டோம். ஆனால், முன்னோடி மருத்துவ மிஷனரியான அவரது தாத்தா John Scudder.Sr பற்றி நம்மில் எத்தனை பேருக்குத் தெரியும்? தாத்தா ஜான் ஸ்கடரில் ஆரம்பித்து, பேத்தி ஐடா ஸ்கடர் வரை தலைமுறை தலைமுறையாக ஸ்கடர் குடும்பத்தினர், இந்தியருக்கு மருத்துவ மற்றும் ஆன்மீக சேவை செய்திருக்கிறார்கள். என்னே அர்ப்பணிப்பு! இன்று John Scudder Sr. பற்றி ஒரு சில காரியங்களைத் தெரிந்து கொள்ளலாம்.



அவர் 1793ஆம் ஆண்டு, செப்டம்பர் 3ஆம் தேதி அமெரிக்காவின் நியு ஜெர்ஸி மாகாணத்தில் பிறந்தார். சிறுவயதிலேயே, தேவையுள்ளோருக்கு உதவும் இரக்க குணம் நிறைந்தவராகக் காணப்பட்டார். 'எப்போதுமே ஜானுக்கு ஒரு கிறிஸ்தவ மனநிலை உண்டு,' (John seemed always possessed of a Christian temper) என்று அவரது குழந்தைப்பருவம் பற்றி அவரது அம்மா கூறியிருக்கிறார். படிப்பில் கெட்டிக்காரராக இருந்த இவர் 1815ஆம் ஆண்டு மருத்துவராக தேர்ச்சி பெற்றார். அவர் மருத்துவராக காலடி எடுத்து வைக்கும் போது, 'மக்களின் சரீர குறைபாட்டிற்கு மருத்துவம் செய்வதோடு, அவர்களின் ஆத்தும தேவையையும் தன்னால் கூடுமான வரையில் பூர்த்தி செய்ய வேண்டும்' என்று ஒரு தீர்மானம் எடுத்தார். அந்த நாட்களில் அதிகளவு மருத்துவர்கள் இல்லாததால், மருத்துவர்களுக்கு நல்ல வரவேற்பு இருந்தது. அதுமட்டுமில்லாமல், ஜான் ஸ்கடரின் திறமையும், கனிவோடு நோயாளிகளை விசாரிக்கும் அன்பும் அநேகரைக் கவர்ந்தது. ஜான் நாளுக்குநாள் பிரபலமாகிக் கொண்டே சென்றார். நல்ல பிரகாசமான எதிர்காலம் அவரை எதிர்நோக்கியிருந்த நிலையில் அவர் வாசித்த ஒரு கைப்பிரதி அவரது வாழ்க்கையையே மாற்றியது. ஆம்! இந்தியா மற்றும் இலங்கையில் சுவிசேஷ ஊழியம் செய்யவேண்டிய அவசியத்தைக் கூறும் '60 கோடி மக்களின் மனமாற்றத்திற்கு சபைகள் என்ன செய்ய வேண்டும்?' என்ற அந்த கைப்பிரதியை அவர் வாசித்தார். மீண்டும் மீண்டும் வாசித்தார். இது ஆண்டவர் தனக்குக் கொடுக்கும் அழைப்பு என்று உணர்ந்தார். சிலநாட்கள் தேவனின் வழிநடத்துதலுக்காகக் காத்திருந்தார். இறுதியில், 'இயேசுவே! சுவிசேஷத்தை அறியாதவர்களுக்கு சுவிசேஷத்தை அறிவித்து, உம் இறுதிப் பேராணையை (The Great Comission) நிறைவேற்ற நான் செல்கிறேன்' என்று உறுதியாக முடிவெடுத்தார். ஜான் தான் மிஷனரியாகச் செல்ல இருக்கும் முடிவை மற்றவர்களுக்கு அறிவித்தபோது, அவர் எதிர்ப்பை சந்திக்க வேண்டியிருந்தது. அவரது அப்பா இம்முடிவை ஏற்றுக்கொள்ளவில்லை. 'உனக்கு அமெரிக்காவிலே பிரகாசமான எதிர்காலம் எதிர்நோக்கி இருக்கும் போது, ஏன் நீ கடல் கடந்து மிஷனரியாகச் செல்ல வேண்டும்? அந்த வேலையை அதிக உபயோகமில்லாத மற்ற யாராவது செய்வார்கள்', என்று கிறிஸ்தவ நண்பர்கள் கூட கூறினர். இன்றும் அநேகக் கிறிஸ்தவர்கள் இவ்வாக்கியத்தை சொல்வதை நாம் கேட்கலாம். ஆனால், ஜான் ஸ்கடர் தனது மிஷனரி அழைப்பில் உறுதியாயிருந்தார். 'எனக்காக ஜெபம் மட்டும் செய்யுங்கள். அது ஒன்றே, நான் உங்களிடம் கேட்பது' என்று சொல்லி 1819ஆம் ஆண்டு, தனது மனைவி, இரண்டு வயது மகள் மரியா மற்றும் சில மிஷனரிகளோடு 'இன்டஸ்' கப்பலில் ஏறினார். இலங்கையின் ஜேப்னா (Jaffna) மாவட்டத்தில் ஊழியத்தைத் துவக்கிய இவர், பிற்காலங்களில் மதராஸ் (சென்னை) மற்றும் மதுரை பகுதிகளிலும் ஊழியம் செய்திருக்கிறார். மருத்துவமனையில் இருந்து கொண்டு, வருபவர்களுக்கு சிகிச்சையளித்து, அவர்களுக்கு சுவிசேஷத்தைச் சொல்வதில் இவர் திருப்திப்படவில்லை. வீதிகளிலும், தெருக்களிலும், மக்கள் கூடும் இடங்களிலும் நின்று சுவிசேஷத்தைப் பிரசங்கித்தார். சுவிசேஷ கைப்பிரதிகளையும், வேதாகமப் பிரதிகளையும் மக்களுக்கு கொடுப்பதில் அதிக ஆர்வம் காட்டினார். 'நான் செய்த பிரசங்கங்களை மக்கள் மறந்து விட வாய்ப்பு உண்டு. ஆனால், அச்சிட்ட தேவனுடைய வார்த்தைகளை மீண்டும் மீண்டும் வாசித்து அவர்கள் பிரயோஜனமடையலாம்' என்பார். மேலும், இவர் பள்ளிகளை உருவாக்கி மக்களுக்குக் கல்வி புகட்டினார். எல்லா ஊழியங்களிலும் இவரது மனைவி இவருக்கு பெரும் உதவியாக இருந்தார். அவரது ஆரம்பகால ஊழியத்தின் போது, அவரது செல்ல மகள் மரியா மரித்துப் போனாள். மூன்று மாதங்கள் கழித்துப் பிறந்த அடுத்த மகளும் மரித்துப் போனாள். இந்த இழப்புகளினால் இளம் மிஷனரி தம்பதி முன்வைத்த காலைப் பின்வைத்து விடவில்லை. தொடர்ந்து ஊழியத்தில் முன்னேறினர்.

**'அமெரிக்காவைவிட இந்தியா பரலோகத்தின் அருகில் இருப்பதைப்போல உணருகிறேன்' - ஜான் ஸ்கடர்**

சில சமயம், இவர் கைப்பிரதி ஊழியத்தை மாதக்கணக்காகச் செய்வார். அப்படி ஒரு முறை, இந்தியாவின் கிழக்கு முதல் மேற்குப் பகுதி வரை சுற்றுப்பிரயாணம் செய்து வேதாகமப் பகுதிகளையும், நற்செய்தி கைப்பிரதிகளையும் வினியோகித்திருக்கிறார். அக்காலத்தில் பிரயாண வசதிகள் அதிகமில்லை என்பது குறிப்பிடத்தக்கது. அவர்

மருத்துவர் என்ற காரணத்தால், அவர் எங்கு சென்றாலும் குஷ்டரோகிகள், குருடர்கள், ஊனமுற்றவர்கள், நோயாளிகள் என்று அவரை சுற்றி ஒரு கூட்டம் கூடிவிடும். அநேக வெற்றிகரமான அறுவை சிகிச்சைகளையும் அவர் செய்திருக்கிறார்.



வேலூரில் ஒருமுறை அவர் சுவிசேஷ ஊழியத்தில் ஈடுபட்டுக்கொண்டிருக்கும் போது, காலை ஏழு மணியில் இருந்து, மாலை ஆறு மணிவரை இருந்த இடத்தை விட்டு அகலாமல், ஓய்வெடுக்காமல் ஊழியம் செய்தார். உணவு இடைவேளை கூட எடுத்துக் கொள்ளவில்லை என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்! அந்த அளவு தன்னை வருத்தி, அர்ப்பணிப்போடு ஊழியம் செய்தார்! வெப்பம் நிறைந்த இந்திய பிரதேசத்தில் அடிக்கடி பிரயாணம் செய்ததால், அவரது உடல் பெலவீனமடைந்தது. ஆரம்ப நாட்களில் இருந்தே அடிக்கடி சுகவீனப்பட்டு வந்தார். **பரமனின் அழைப்புக்குக் கீழ்ப்படிந்து இந்தியாவிலும், இலங்கையிலும் 36 ஆண்டுகள் முன்னோடி மருத்துவ மிஷனரியாகப் பணியாற்றிய இந்தப் போர்வீரன், 1855ஆம் ஆண்டு ஜனவரி 13ஆம் தேதி தனது ஓட்டத்தை முடித்து, சீகன்பால்க், ஸ்வார்ட்ஸ், ரேனியஸ் வரிசையில் இறைவனடி சேர்ந்தார்.**

வாசகர்களே! 'நீ நன்கு படித்திருக்கிறாய், நல்ல வேலை பார்க்கிறாய், நீ ஏன் மிஷனரியாக முழுநேர ஊழியனாகச் செல்ல வேண்டும்? வேறு யாராவது செல்வார்கள்' என்று இன்றும் கிறிஸ்தவர்கள் சொல்கின்றனர். நாமும் அதைக்கேட்டு 'அதுவும் சரிதானே!' என்று எண்ணுகிறோம். சற்று சிந்தித்துப் பாருங்கள்! ஜான் தனது நண்பர்களின் பேச்சைக் கேட்டு மிஷனரியாய் வராதிருந்தால் என்ன ஆகியிருக்கும்? ….. மக்கள் மருத்துவ உதவி பெற்றிருக்க மாட்டார்கள், சுவிசேஷத்தை கேள்விப்பட்டிருக்க மாட்டார்கள், வேலூர் CMC மருத்துவமனை தோன்றியிருக்காது, இன்னும் சொல்லிக்கொண்டே போகலாம். ஒன்றை நாம் மறக்கவே கூடாது! அன்றைக்கு **மிஷனரிகள் கோதுமை மணிகளாய் விழுந்ததால் தான் இன்றைக்கு நாம் நல்ல நிலைமையில் இருக்கிறோம்!** எனது ஆசையெல்லாம், படிப்பு வராதவர்கள் ஊழியம் செய்யட்டும் என்ற முட்டாள்தனமான கூற்றுக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட வேண்டும்.

நன்கு படித்தவர்கள், திறமை வாய்ந்தவர்கள் மிஷனரிகளாய்/ முழுநேர ஊழியர்களாய் ஒப்புக்கொடுக்க வேண்டும்.

வாலிபரே! மிஷனரிகளாய் முழுநேர ஊழியராய் எழும்புங்கள்!

'பிள்ளைகளே வாலிபரே கர்த்தரை துதியுங்கள்
வாழ்வதனை அவர் பணிக்கே கொடுத்து நீர் துதியுங்கள்' –

சகோ.எமில் ஜெபசிங்

# ஈரோட்டின் மருத்துவ தாய் என்று போற்றப்படும் டாக்டர் ரீஸ் & டாக்டர் போலார்டு



20-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஈரோட்டுப் பகுதியில் பிளேக், மலேரியா, காலரா, அம்மை முதலிய நோய்களால் மக்கள் பெரிதும் துன்புற்றனர். ஆயிரக்கணக்கானோர் இறந்தனர். தக்க மருந்தும். விழிப்புணர்வும் இல்லாததே இதற்குக் காரணம். நாட்டு மருத்துவம் பெரிதும் பலனளிக்கவில்லை. இந்நிலை கண்டு வருந்திய பிரப் துரை அவர்கள் 1909-ஆம் ஆண்டு வேலூரிலிருந்து டாக்டர் மைகன்சி ரீஸ் என்ற அம்மையாரை அழைத்துக் கொண்டு வந்து தன் பங்களா முன்னர் கொட்டகை அமைத்து மக்களுக்கு இலவச மருத்துவம் செய்தார். மூன்றாண்டுகள் பணியாற்றிய மைகன்சி ரீஸ் Rev T.C . விட்னியை திருமணம் செய்து கொண்டு விடை பெற்றுச் சென்று விட்டார்.



மருத்துவத்தின் தேவை அதிகமாகவே, டாக்டர் மிஸ் ஹில்டா போலார்டு அம்மையாரை வேலூரில் டாக்டர் ஐடா ஸ்கடர் உடன் 1913 ஆண்டு முதல் 1917 வரை ஆற்காடு மெடிக்கல் மிஷனில் பணி செய்த அவர்கள் பிரப் துரையால் ஈரோடு பகுதிக்கு மருத்துவப் பணிக்கு அழைத்து வரப்பட்டார். சிறப்பான மருத்துவப் பணியால் எல்லோராலும் இவர் 'போலார்டம்மா' என்று அன்பாக அழைக்கப்பட்டார்..

**ரமேஷ் ஆல்பட்**

# நற்செய்திப் பணியில் மருத்துவத்துறை
## –டாக்டர்.தியோடர் ஹோவர்ட் சாமெர்வெல்,

தியோடர்ஹோவர்ட்சாமெர்வெல், இங்கிலாந்துதேசத்தில் ஒரு அறுவை சிகிச்சை நிபுணர். இவர் இங்கிலாந்தில் வெஸ்ட்மோர்லேண்டில் கெண்டல் என்ற ஊரில் பிறந்தார். இவரது பெற்றோர் காலணிகளை தயாரிக்கும் தொழிற்சாலை வைத்திருந்த ஒரு வசதியான ஒரு குடும்பத்தினர். இவரது பதினெட்டாம் வயதில் மலையேற்றப் பயிற்சிக் கழகத்தில் சேர்ந்தார். ஆர்வத்துடன் மலையேற்றத்தைக் கற்றார். அவரது பள்ளிப் படிப்பை முடித்தப் பிறகு, மருத்துவம் பயின்றார். இந்நாட்களில் இவர் கிறிஸ்துவை சொந்த இரட்சகராக ஏற்றுக் கொண்டார். மருத்துவக் கல்லூரியில் பயிற்சி மருத்துவராக இருந்தார். அந்நாட்களில் முதலாம் உலகப் போர் நடைபெற்றுக் கொண்டிருந்தது. அங்கு காயப்பட்ட வீரர்களுக்கு சிகிச்சை அளிக்க மருத்துவர்கள் தேவைப்பட்டதால் அங்கு சென்று அறுவை சிகிச்சை நிபுணராக பணியாற்றினார்.

ஓவியம் வரைவதில் மிகுந்த ஆர்வம் உடையவர். இந்நாளில் அவர் வரைந்த ஓவியம் புவியியல் சமூகக் கூடத்தில் வைக்கப்பட்டுள்ளது. இவர் ஒரு சிறந்த இசைக்கலைஞரும் கூட. இவர் பல திபெத்திய பாடல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து, பாடி அனைவர் மனதிலும் இடம் பிடித்துள்ளார். அறுவை சிகிச்சை நிபுணராக இருந்தாலும் மலை ஏறுவதில் அதிக ஆர்வம் கொண்டிருந்தார். 29000 அடி உயரத்தில் இருந்த எவரெஸ்ட் மலையை ஏறும் முயற்சியில் ஈடுபட்டார். டாக்டர் ஜார்ஜ் மல்லாரியின் தலைமையில் சென்ற போது ஏற்பட்ட கடுமையான பனிப்புயலின் காரணமாக ஜார்ஜ் மல்லாரி அப்பொழுதே மரணமடைந்தார். ஆகவே ஹோவர்ட் சாமெர்வெலின் மலை ஏறும் முயற்சியும் தோல்வியடைந்தது. மறுபடியும் ஹிமாலய மலைஅடிவாரத்தில் வாழ்ந்த ஷெர்பாக்கள் என்னும் வழிகாட்டினர்கள் சுமார் பதினைந்து நபர்களோடு மறுபடியும் மலை ஏறினார். இடுப்பளவு பனியில் ஏற்பட்ட பனிச்சரிவில் (Avalanche) ஷெர்பாக்கள் அனைவரும் மரித்துப் போக டாக்டர் ஹோவர்ட் சாமெர்வெல் மட்டும் உயிர் தப்பினார். எவரெஸ்ட் மலையின் உச்சியில் சுமார் 28 ஆயிரம் அடி உயரம் வரை சென்றனர். அக்காலத்தில் யாராலும் இச்சாதனையை முறியடிக்க இயலவில்லை. மலை ஏற்றதற்காக ஒலிம்பிக் தங்கப்பதக்கத்தையும் போவர்மலை ஏற்றதற்காக ஒலிம்பிக் தங்கப்பதக்கத்தையும் ஹோவர்ட் பெற்றுள்ளார். பின்பு யாராலும் இச்சாதனையை முறியடிக்க இயலவில்லை.

ஏன் தனக்கு மட்டும் மரணம் வரவில்லை என்ற கேள்வியோடு இந்தியா முழுவதும் பயணப்பட ஆரம்பித்தார். கடைசியில் கன்னியாகுமரி அருகில் உள்ள நெய்யூரில் இருந்த மிஷன் மருத்துவமனைக்கு சென்று அங்குள்ள மக்களின் ஏழ்மையையும், மருத்துவ வசதிகள் இன்றி அவதியுறுவதையும் கண்டு அதிர்ச்சி அடைந்தார். நெய்யூரில் இருந்த இலண்டன் மிசன் அமைப்புடன் இணைந்து மருத்துவப்பணி செய்யத் துவங்கினார். அங்கே இருந்த ஒரே மருத்துவரிடம் மிகுதியான நோயாளிகள் நீண்ட வரிசையில் காத்திருந்து சிகிச்சை பெறுவதைக் கண்டார். ஒரே ஒரு மருத்துவரிடம் காலராவால் பாதிக்கப்பட்ட சுமார் 500 நோயாளிகள் சிகிச்சை பெற நீண்ட வரிசையில் காத்துக் கிடப்பதை பார்த்தார். எந்த ஒரு பணி நியமனத்தையும், வருமானத்தையும் எதிர்பாராமல் நாற்காலி



ஒன்றில் அமர்ந்து சிகிச்சை அளிக்கத் தொடங்கினார். இந்திய மக்களுக்கு கிறிஸ்துவும், சிகிச்சையும் தேவை என உணர்ந்தார். தேவன் தன்னை இதற்காகவே உயிருடன் வைத்திருக்கிறார் என்று புரிந்து கொண்டு, அதற்காக முழு மனதோடு செயல்பட ஆரம்பித்தார். **இங்கிலாந்து தேசத்தில் தனக்கிருந்த அனைத்து சொத்துக்களையும் விற்று நெய்யூர் மிஷன் மருத்துவமனைக்கு செலவு செய்தார்.** நிரந்தரமாக இந்தியாவிலேயே தங்கி இந்தியர்களுக்கு சுவிசேஷத்தையும் மருத்துவத்தையும் அளிக்க தன்னை அர்ப்பணித்தார். நாள் ஒன்றிற்கு 8 முதல் 16 அறுவை சிகிச்சைகள் வரை செய்து மருத்துவ துறையின் மூலம் பெரும் சேவை ஆற்றினார். சுமார் 25 ஆண்டுகள் நெய்யூரில் பணி செய்து விட்டு பின்பு வேலூர் சி.எம்.சி மருத்துவமனையில் தன் பணியை ஹோவர்ட் இறுதி வரை செய்தார். இவரது சேவையின் மூலம் அநேகர் கிறிஸ்துவை சொந்த இரட்சகராக ஏற்றுக் கொண்டனர்.

அறுவை சிகிச்சை நிபுணரான சாமெர்வெல், செல்வ செழிப்புடன் தன் மண்ணிலேயே வாழ்ந்து இருக்கலாம். ஆனால் நம் மக்கள் படும் கஷ்டத்தை அவரால் சகிக்க முடியவில்லை. தன்னை இரட்சித்த கிறிஸ்துவுக்காக இம்மருத்துவ பணியை தியாகத்தோடு செய்து வந்தார். இன்றும் நற்செய்திப் பணியில் மருத்துவத்துறை சிறந்து விளங்கி வருகிறது. நம்முடைய அர்ப்பணம் எப்படிப்பட்டதாக உள்ளது?

**நிருபா ஜேசுவடியான், சென்னை**

# வேதாகமத்தில் இசை மருத்துவம்

இசை என்றால் இசைவிப்பது என்பது பொருள். இசையைக் கேட்பவரின் மனநிலையை மாற்றும் திறன் இசைக்கு உண்டு. மனநிலையான இன்பம், துன்பம், வெறுப்பு, சோகம், மனஅழுத்தம் போன்றவற்றை மாற்றும் வலிமைக் கொண்டது இசை. இறைவனையே கவரும் தன்மை இசைக்கு உண்டு என பலர் நினைப்பர். இறைவன் மனிதனுடன் உறவாட, தனது மொழியாக இசையைக் கொண்டுள்ளார் என்பதே உண்மை. Music is the universal language என்பது உலக வாக்கு.

இசை மருத்துவத்தைக் குறித்த செய்திகள் உலகம் முழுவதும் பரவிக் கிடக்கின்றது. இசை மருத்துவத்தின் மூலம் மனஅழுத்தம், இரத்தக் கொதிப்பு, நரம்பு தளர்ச்சி, பய உணர்வு போன்ற நோய்கள் குணமடைவதாக மருத்துவ நிபுணர்கள் மற்றும் இசை வல்லுநர்கள் தங்கள் ஆராய்ச்சியால் உறுதிப்படுத்தியுள்ளனர். ஒவ்வொரு தேசத்திற்கும், வித்தியாசமான இசைக்கருவிகள் கொண்டு இசை மருத்துவம் செய்யப்படுகின்றது. இம்மருத்துவத்திற்கு முன்னோடியாய் இருக்கும், வேதாகமத்தில் காணப்படும் சம்பவத்தை நினைவுக் கூற விரும்புகிறேன்.

**முதன்மை சொற்கள்:**

கர்த்தர், தாவீது, கின்னோர், சுரமண்டலம், மருத்துவம்

**மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் நடத்தப்பெற்ற இசை மருத்துவம்:**

1 சாமுவேல் 16:23-ம் வசனத்தில், சுரமண்டலம் என்ற இசைக்கருவியை வாசிக்கும் போது, சவுலுக்குள் உள்ள தீய ஆவி அவனை விட்டு நீங்க, சவுல் ஆறுதலடைந்து, சொஸ்தமடைவான் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. சுரமண்டலம் என்ற தீய ஆவியை நீக்கும் சிறப்புக் கொண்ட இந்த இசைக் கருவியின் உருவம் என்ன என்பதையும், தற்காலத்தில் சுரமண்டலம் எவ்வாறு உருமாற்றம் பெற்றுள்ளது என்பதையும், பின்வருமாறு காண்போம்.

வேதாகமத்தில் உள்ள இசைக்குறிப்புகள் யாவும் எபிரேய இசையை சார்ந்ததாகும். கின்னோர் என்ற எபிரேய இசைக்கருவி, சுரமண்டலம் என்று தமிழ் மொழிப்பெயர்ப்புகளில் குறிக்கப்பட்டுள்ளது.

**வேதாகமத்தில் கின்னோர் இசைக்கருவியின் உருவமும் அதன் பயன்பாடும் பின்வருமாறு:**

- கின்னோர் தந்திக் கருவியான யாழ் வகையை சார்ந்ததாகும்.
- ஆலய வழிபாட்டிலும் இறைவாக்குரைக்கும் பொழுதும், உடன்படிக்கை பெட்டியை எடுத்துச் செல்லும் பொழுதும் இக்கருவி இசைக்கப்பட்டது..
- கின்னோர் என்பது யாழ் வகையை சேர்ந்த இசைக் கருவியாகும். இக்கருவி 8 முதல் 10 நரம்புகள் கொண்டதாய் இருக்குமென்றும், ஒட்டகத்தின் நரம்பு இக்கருவியில் பயன்பட்டது என்பதும் ஆய்வாளர்கள் கருத்து.
- 'கின்னோர்' என்பது 'ஹார்ப்' அல்லது 'லையர்' என்ற பெயர்களில் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.
- **யாழ், சுரமண்டலம், வீணை** என்ற கருவிகளின் பெயர்களை தமிழ் மொழிப்பெயர்ப்புகளில் பயன்படுத்தியுள்ளனர்.
- இக்கருவி விரலால் அல்லது கொம்பால் ஆன அடிக்கோலால் (plectrum) இசைக்கப்படுகிறது.

கின்னோர் இசைக்கருவிகள், காலத்தால் மிகவும் பழமையான கருவி எனலாம். ஏனெனில் கீழ்க்காணும் கின்னோரின் உருவப் படங்களை நாம் ஆராய்ந்து பார்க்கையில், இறந்த மிருகத்தின் மண்டை ஓட்டின் கொம்புகளில் நரம்புகள் கட்டப்பட்டு கின்னோர் உருவாக்கப்பட்டுள்ளது. பின்னர் நாளடைவில் மரங்களைக் கொண்டும் தயாரிக்கப்பட்டுள்ளது. கின்னரம் என்ற







கின்னோர் வரைப்படம்

தந்திக்கருவி நமது தமிழிசையில் இருந்ததுள்ளது. கின்னோர் - கின்னரம் பெயருடன் ஒப்பிடுகையில் இரண்டும் தந்திக் கருவி வகையை சார்ந்ததாகும்.

இத்தந்திக் கருவி தற்கால கிட்டார் என்ற இசைக்கருவியின் உருவத்தைப் பெற்றுள்ளது எனலாம். தந்திக்கருவிகள் இயற்கையோடு இணைந்த ஒரு மகத்துவமுள்ள இசைக்கருவியாகும்.

மனிதர்கள் தனிமையின் சூழ்நிலையில் விடப்படும் போதும், உடல்நலக் குறைவால் மருத்துவமனையில் தனிமையில் இருக்கும் போதும், கொரானாவின் தாக்குதலால் தனிமைப்பட்டாலும், மருத்துவ சிகிச்சைப் பெறும்போது மட்டுமல்லாது, வயது மூப்பின் காரணமாகவோ, அல்லது மரணத் தருவாயில் இருக்கும் போதோ, நம் உறவுகளுக்கும் நண்பர்களுக்கும் ஆண்டவரின் வார்த்தைகள் அடங்கிய பாடலைக் கேட்கச் செய்வதும் அல்லது நாம் அவர்கள் அருகில் அமர்ந்து மெல்லிய இசைக்கருவிகளோடு பாடுவதும், அவர்களது மனச் சோர்வை நீக்கும், மன உறுதியை அளிக்கும். அதுமட்டுமல்லாமல், தனது இறுதி நேரத்தில் உள்ளவர்கள் மரண பயமின்றி, கடவுளிடம் தனது ஆத்துமாவை சேர்க்கவும் இந்த இசை மருத்துவம் பயனளிக்கிறது. இசையின் வகைகள் மாறலாம். இசைக் கருவிகள் மாறலாம். இறைவனின் வார்த்தைகள் என்றும் மாறாது. இறைவனைத் துதிப்போம், இறையாசிப் பெறுவோம்!

இஸ்ரவேலின் பரிசுத்தரே, சுரமண்டலத்தைக் கொண்டு உம்மைப் பாடுவேன். நான் பாடும் போது என் உதடுகளும், நீர் மீட்டுக் கொண்ட என் ஆத்துமாவும் கெம்பீரித்து மகிழும். சங்கீதம்71:22,23




**இரா.கிருபாவதி**
**இசை முனைவர் பட்ட ஆய்வாளர்**
**கலைக்காவிரி நுண்கலைக் கல்லூரி**
**திருச்சி**

சிறுபான்மையினரும் - இந்திய அரசியல் சட்டமும்

# அகண்ட பாரதம் உண்மையா?

(வரலாற்று தொடர் -1)

சாமுவேல் ஆபிரகாம் . D

ஆங்கிலேயர்கள் இவ்வாறு இரட்டை ஆட்சி முறையில் தற்போதைய இந்தியாவை ஆட்சி செய்யும் போது, ஆங்காங்கே சிறுசிறு குழுக்களாக இந்திய சுதந்திரத்திற்காக குரல் எழுப்பப்பட்டு, அவைகள் இரும்புக்கரம் கொண்டு அடக்கப்பட்டன. இந்தியன் நேஷனல் காங்கிரஸ் துவங்கப் பெற்று வேகமாக வளர்ச்சி பெற்று வந்தது. காங்கிரஸ் கட்சிக்குள் இருந்த ஒரே நோக்கம் இந்தியாவின் சுதந்திரம் மட்டுமே; இருப்பினும், அதே கட்சிக்குள் இருந்த தலைவர்களுக்குள், சுதந்திரம் கிடைத்த பின் எப்படி நாட்டை ஆள்வது என்பது குறித்து ஒத்தகருத்து ஏற்படவில்லை. இந்துக்கள் பெருவாரியாக இருக்கும் நாட்டில் நமது எதிர்காலம் எப்படி இருக்கும் என்று முஸ்லிம் தலைவர்களும், கிறிஸ்தவர்களும் கவலை பட்டனர். இருப்பினும் முதலாவது நாட்டின் விடுதலையே முக்கியம் என்று பொறுமை காத்தனர். ஆங்கிலேயர்களை எதிர்ப்பதில் தீவிரம் காட்டினர்.

இது சமயம் காந்தி ஆப்ரிக்காவிலிருந்து 09-01-1915ல் இந்தியா வந்தார். காங்கிரசின் போராட்டத்தை முன்னெடுத்தார். விளைவு சுதந்திரப் போராட்டம் உத்வேகம் எடுத்தது. பல்வேறு போராட்டங்கள் இந்நேரம் காந்திஜியின் அஹிம்சையும், அவரின் முஸ்லிம் தலைவர்கள், மக்களுடன் நெருங்கிய நட்பும், அவருக்கான பரிவும், காங்கிரசில் இருந்த இந்து தீவிரவாத எண்ணம் கொண்டவர்களை கதிகலங்க வைத்தது. குறிப்பாக கேசவ் பாலிராம் ஹெக்வார் காங்கிரஸ் கட்சியின் செயற்குழு உறுப்பினராக இருந்தவர். இவர் காங்கிரஸ் கட்சியிலிருந்து, கட்சியை இந்துக்களுக்கு சாதகமாக வழி காட்டியவர்.

இந்தியா - இந்து மக்களுக்கு மட்டுமே என்ற கோஷத்துடன் கட்சியிலிருந்து விலகி 1920ல் ராஷ்டிரிய சுயம் சேவக் (RSS) என்ற இயக்கத்தை ஆரம்பித்தார். ஹோல்வாக்கர் போன்றவர்கள் அதில் சேர்ந்தனர். 1916 இல் நடைபெற்ற 'லக்னௌ' உடன்படிக்கையில் முகமது அலி ஜின்னா ஓர் 14 அம்ச கோரிக்கையை முஸ்லிம் மக்களுக்காக காங்கிரஸ் கட்சியில் முன்மொழிந்து பேசினார். காங்கிரஸ் இதற்கு ஒத்துக்கொண்டால் மட்டுமே தாம் காங்கிரஸ் கட்சியில் தொடர முடியும் என்றும், சுதந்திரம் பெற்ற பின்னர் இந்து பெரும்பான்மைமிக்க நாட்டில் முஸ்லிம் மக்களுக்கு சட்டசபையிலும் தேர்தலிலும் அரசு நியமனங்களிலும் நியாயம் கிடைக்காது என்று உறுதியாய் நம்பினார். 14 அம்ச கோரிக்கையை பரிசீலனை செய்யும் முன்பே காங்கிரஸ் கட்சிக்குள் இருந்த இந்து மத தீவிரவாதிகளால் அது நிராகரிக்கபட்டது.

1940க்கு பின்னர் ஜின்னா முஸ்லிம்களுக்கு தனி நாடு என்ற முழக்கத்தை முன்னெடுத்தார். இதற்கிடையில் காங்கிரஸ் கட்சியினர் சுதந்திரம் கிடைத்த பின்னர் இது குறித்து முடிவெடுக்கலாம் என்று அப்போதைக்கு இதை ஒத்தி வைத்தனர். இதற்கிடையில் RSS நன்கு வளர்ந்து இந்தியா முழுமைக்கும் சுயம் சேவாக்களை அனுப்பியது. பி. எஸ். மூன்சி (B.S. Moonzie Beritto) ஹோல்வாக்கர் (Golwakar 1906) வி. டி. சாவர்க்கர் போன்றோர் இந்து மஹா சபையை நிறுவி, இந்து கலாச்சாரம் மட்டுமே இந்தியாவில் இருக்க வேண்டும் என்ற பரப்புரை, எழுத்து, கூட்டங்கள் நடத்தினர். இவர்களின் கொள்கை முற்றிலும் காந்திஜியின் கொள்கைகளுக்கு எதிரானது. இன்னும் சொல்லப்போனால், இதில் பயிற்சி பெற்ற நாதுராம் கோட்சே, அவருக்கு கைத்துப்பாக்கி கொடுத்து குவாலியர் மருத்துவர் உடன் சென்ற நாராயண் ஆப்தே (இவர்கள் தான் காந்தியை சுட்டுக் கொன்றவர்) அனைவரும் RSS மற்றும் இந்து சபாவின் சீடர்களே!

இந்த சூழ்நிலையில், காங்கிரஸ் கட்சியிலும் அனேக முஸ்லிம் தலைவர்கள் தொடர்ந்து பணியாற்றியதால் ஏதாவது வழியில் அரசியல் சாசனம் எழுதும் போது, சிறுபான்மையினருக்கு கண்டிப்பாக பாதுகாப்பும், சிறப்பு சலுகைகளும் வழங்கப்படும் என்று காந்திஜி, நேரு, படேல் போன்ற தலைவர்கள் உறுதி அளித்தனர். இந்தப் பிரச்சனையை தீர்ப்பதற்கு சில நாடாளுமன்ற இடங்களை சிறுபான்மையினருக்கு ஒதுக்கீடு செய்வது என்ற எண்ணமும் இருந்தது. ஆனால், முகமது அலி ஜின்னா, முஸ்லிம்களுக்கு தனி நாடு கோரிக்கையை முன்னெடுத்தவுடன், இந்த சிறப்பு சலுகையை காங்கிரஸ் கைவிட்டது. ஏனெனில் முஸ்லிம் மக்களுக்கு என தனிநாடு கிடைத்தாகி விட்டது. ஆனால் முஸ்லிம் லீக்கில் இருந்த சென்னை, ஹைதராபாத் நிஜாம் முஸ்லிம் மக்கள் மத ரீதியாக ஒன்றாக இருப்பினும் கலாச்சார ரீதியாக வேறுபட்டதால் பாக்கிஸ்தானுக்கு செல்லாமல், இந்தியாவிலேயே தங்கி விட்டனர்,

சில இயக்கங்கள் சுதந்தர இந்தியாவில், முஸ்லிம்களுக்கு தனிநாடு ஒதுக்கிய பின்னர், இந்தியா இந்துக்களுக்கு மட்டுமே என குரலை உயர்த்தினர். அவர்களுக்குள் இரண்டு பிரிவாகினர். நாடு வேறு; கலாச்சாரம், இந்து பண்பாடு வேறு என்றனர் மிதவாதிகள். இதில் சுவாமி விவேகானந்தர், பால கங்காதர திலகர், வி.டி. சுவாமிகள் (நமது செங்கோட்டை வாஞ்சிநாதன் இவருடைய சிஷியன் தான்) இவர்களுக்கு ஆட்சியில் யாராக இருந்தாலும், இந்து கலாச்சாரம் மட்டுமே முக்கியமானது. இரண்டாவது, ஆட்சியும் கலாச்சாரமும் இந்தியாவில் இந்து மக்களிடம் மட்டுமே இருக்க வேண்டும். பிற மதஸ்தர்களும் பிற கலாச்சாரகாரரும் இந்திய கலாச்சாரத்தை பின்பற்றியதாகவே இருக்க வேண்டும். ஆங்கிலேய, ஐரோப்பாவை பின்பற்றியதாக இருக்கக் கூடாது என்றனர். இதில் கேசவ் பாலிராம், ஹெக்வார், பி.எஸ். மூன்ஜி பெரிட்டோ (இவர் முசோலினியின் சீடர்) ஹோல்வார்கர், கோட்சே, ஆப்தே அடங்குவர். இவர்களை பொறுத்தவரையில் இந்துக்களால் மட்டுமே அரசாட்சி நடைபெற வேண்டும். அதன் மூலம் சட்டம் இயற்றப்பட்டு, கலாச்சாரம், பண்பாட்டை பராமரித்து வளர்க்கலாம். சுருக்கமாக இதை இந்துத்துவா என்று அழைத்தனர். இதில் ஆச்சரியம் என்னவென்றால், பிரச்சாரக்காரர்கள், தன்னை வெறுத்து, குடும்ப வாழ்க்கையை வெறுத்து தேசாந்திரியாக சுற்றுப்பயணம் செய்து இந்துத்வாவை பிரச்சாரம் செய்தாலும் காந்திஜி, நேருஜி, போன்ற மிகப்பெரும் தலைவர்களின் பிரமாண்ட கவர்ச்சியில் இந்த தத்துவம் எடுபடாமல் நேருஜியின் சோஷியலிசம் மட்டுமே மக்களிடம் பெரிதும் விரும்பப்பட்டது. மேலும் இந்துத்துவா ஜாதி வேறுபாடுகளையோ, தீண்டாமையையோ ஒழிக்க எவ்வித தீர்வையும் சொல்லவில்லை.

இப்போது 1947 - இப்போது இந்தியாவுக்கு சுதந்திரம் கிடைத்து விட்டது.

இந்த காலச் சூழ்நிலையில் தான் இந்தியாவின் அரசியல் சாசனம் தயாரிக்க முனைந்தனர். டாக்டர் பி. ஆர். அம்பேத்கார் தலைமையிலும் ஹரேந்திர கூமர் முக்கர்ஜி ( Harmendra Coomar Mookergee) அவர்களை துணைத்தலைவராக கொண்ட சிறுபான்மையினர் துணைக்குழு உருவாக்கப்பட்டது. டாக்டர் முகர்ஜி அவர்கள் ஒரு கிறிஸ்தவ தலைவர். மேற்கு வங்காளத்தை சார்ந்தவர். ஆங்கிலத்தில் கல்கத்தா பல்கலைக்கழகத்தில் டாக்ட்ரேட் பெற்ற முதல்வர். இவருடைய தலைமையில் தான் இக்குழு கூடி தற்போதைய இந்திய அரசியல் சட்டத்தில் சிறுபான்மையினருக்கான பாதுகாப்பையும் சிறப்பு சலுகைகளையும் உருவாக்கினர்.

தொடரும்...

# கௌடியின் ஆழ்ந்த அன்பு

கௌடி ஐயர் காலத்தில், 1889-1891க்கு இடைப்பட்ட வருடங்களில், செங்கல்பட்டு, வடஆற்காடு மாவட்ட கிராமங்களில் உள்ள ஒடுக்கப்பட்ட தலித் மக்களை, தீண்டாமை என்ற கொடுமையோடு, பஞ்சமும் அவர்களை மிகவும் பாதித்தது. இது பற்றி **மிஷன் வேலையும் பஞ்சமும்** என்ற புத்தகத்தில் கௌடி எழுதியதாவது:

"1889 - ஆம் ஆண்டின் பிற்பகுதியில் பாதிக்கப்பட்ட மாவட்டங்களில் மழைப்பொழிவு மிகமிகக் குறைவானதால் 1890-ஆம் ஆண்டு பற்றாக்குறை ஏற்பட்டது. இதைத் தொடர்ந்து 1890-ஆம் ஆண்டு இறுதியில் பருவமழை முற்றிலும் குறைந்து விட்டது. கூலியாட்கள் தங்கள் தினசரி உணவுக்காக தினசரி வேலையை நம்பியிருந்தனர். சிறு விவசாயிகள், முதலும் இல்லாமல் போதிய இருப்பு அல்லது இருப்பே இல்லாமல் மட்டமான விதைகளை துண்டு நிலங்களில் பயிரிட்டு, கைக்கும் வாய்க்குமாக வாழ்ந்து கொண்டிருந்த நில உரிமையாளர்களிடம் மிகவும் கஷ்டப்பட்டனர். இந்த துன்பமும் வருத்தமும் இவர்களுக்கு முதல்முறையாக வந்தபடியால், அது அவர்களை கடுமையாக, விரைவாக தாக்கியது. சிலர் பட்டினியாலேயே இறந்து விட்டனர்".

கௌடி நமது ஜனங்களின் கஷ்டங்களில், துயரங்களில் பங்கு கொண்டு இப்படியாக எழுதுகிறார்: "**வெறுமையான வீடுகளில் சாப்பாடு இல்லாமல், சோர்வான நிலையிலிருக்கிற நூற்றுக்கணக்கான, பட்டினிக்கொடுமை நிறைந்த மக்கள் இறந்து விடுகிற நிலையில் இருந்தாலும், எப்படியோ இன்னும் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.**"

ஒரு நாள் ஒரு பெண் தன் மகளைக் காண போர்டிங் பள்ளிக்கு வந்திருந்தாள். அவள் வாந்திபேதி நோயால் தாக்கப்பட்டிருந்தாள். சற்று நேரத்தில் அவள் மரித்தாள். அச்சம் காரணமாக அவளைப் புதைப்பதற்காக கல்லறைக்குத் தூக்கிச் செல்ல எவரும் முன்வரவில்லை. கௌடி மனந்தளரவில்லை. தமது உதவியாளரான உபதேசியாரிடம் குழிவெட்டும்படி பணித்தார். ஒரு வண்டி ஏற்பாடு செய்து பிணத்தைத் தூக்கிச் சென்று அடக்க ஆராதனை நடத்தி புதைத்தார். வரும் வழியில் ஒரு மரத்தடியில் இருவரும் முழங்கால்படியிட்டு, இதயபூர்வமாக இறைவனை நோக்கி, மற்றவர்கள் மேலும் காலரா பரவக் கூடாதென்று மன்றாடினர்.

**கௌடியின் ஆழ்ந்த அன்பு எப்படிப்பட்டதென்று பாருங்கள்!**

அவருடன் சென்ற உதவியாளர் உபதேசியாரிடம், பிணத்தைப் புதைக்கும்பொழுது இருபது கெஜ தூரத்துக்குள் நீங்கள் வர வேண்டாம் என்று சொல்லி தாமே அதைப் புதைத்தார். உபதேசியாரை நோய் தாக்கக்கூடாதென்பதில் அத்தனை கரிசனை காட்டினார். ஆயினும் தம்முடைய ஆரோக்கியத்தைப் பற்றிக் கவலைப்படவில்லை. இதே போல ஒரு குடிசையில் காலரா தாக்கிய மூவருக்கு உதவி செய்தார். தம்முடைய சுவிசேஷ வேலையில் பன்னிரண்டு பையன்கள் கொண்ட ஒரு குழுவை வைத்திருந்தார். அவர்களை **'பன்னிரண்டு அப்போஸ்தலர்கள்'** என்று அழைப்பார். இம்மாணவர்கள் காலரா நோயாளிகளுக்கு உதவ அவருடன் வருவதற்கு அனுமதி கேட்டனர். ஆனால் அவர்களுக்கு அனுமதி மறுத்ததுடன், அனைவரையும் தாம் திரும்பி வரும் வரை வெளியே போகாதபடி ஓர் அறைக்குள் போட்டுப் பூட்டி விட்டார்.

அக்காலத்தில் சென்னை வட்டாரத்தில் காலராநோய் பரவியிருந்தது, ஈக்காடும் அதற்கு விதி விலக்காகவில்லை. பலர் அக்கொள்ளை நோய்க்குப் பலியாயினர். மிஷன் வளாகத்திலும் அதைச் சுற்றியுள்ள கிராமங்களிலும் நோய் பரவியிருந்தது. காலராவின் கொடுமையிலிருந்து தப்பிக்கும் படி அநேக மக்கள் அங்கிருந்து பறந்து விட்டனர். தயாளர் கௌடியும், மருத்துவரான செல்வி ஃபேனிவுட் என்பாரும் ஈடில்லா சேவையாற்றினர். காலரா நோயாளிகள் இடையே கடவுளின் பேரருளான அன்பையும் பரிவையும் கஷ்டப்படுகிற அந்த நோயாளிகளிடையே விளங்கச் செய்தனர். தம் இணையற்ற சேவை மூலம் இருவரும் நோயாளிகளைக் கனிவுடன் பராமரித்தனர். மிஷன் ஆஸ்பத்திரிகள் மூலம், மருத்துவ உதவி அளிக்கப்பட்ட போதிலும், இந்த கொடிய ஆட்கொல்லி நோயால் பலர் பரிதாபமாக மாண்டனர். இறந்து போன கிறிஸ்தவர்களை கௌடி எடுத்துச் சென்று கல்லறையில் அடக்கம் செய்தார்.

கௌடியால் வழி நடத்தப்பட்ட ஒரு பழைய விடுதி மாணவன், தான் காலரா நோயினால் கஷ்டப்படும் போது கௌடி தன்னை எப்படி பராமரித்தார் என்பதையும், தான் கௌடியின் கோட்டின் மீது வாந்தி எடுத்து அதை பாழாக்கி விட்டதையும் நினைவு கூறுகிறார்.

கௌடி தம்முடைய எழுத்துக்களில் ஞானப்பிரகாசம் என்ற கிறிஸ்தவ பையனைப் பற்றிய கதையை வெளிப்படுத்தியுள்ளார். கிறிஸ்தவ மாணவரான ஞானப்பிரகாசம் காலரா நோயினால் கடுமையாகத் தாக்கப்பட்டான். மிஷன் மருத்துவமனையில் சிகிச்சை பெற்றான். அவன் படுத்திருந்த அறையில் இருவர் அந்நோயால் இறந்து விட்டனர். கௌடி "ஞானப்பிரகாசத்தை நோக்கி நீ பயப்படுகிறாயா?" என்று கேட்டார்.

"என் இரட்சகர் என்னை அழைக்கிறபோது நான் அவரண்டை போகாதிருப்பேனோ? இங்கே என்னைப் பிடித்து வைக்க என்ன இருக்கிறது?" என்று பதிலளித்து அவன் மரண மடைந்தான்.

**மன்னா செல்வகுமார்**



AT SACHIAPURAM, NORTH TINNEVELLY: HOSPITAL, PATIENTS, DRESSER, AND ATTENDANT.